# பெருமாள் திருமொழியின்—உள்ளுறை.

திருமகள் கொழுநனான ஸர்வேச்வரன், தனக்கு அடிமை செய்து உய்தற்கு இட்டுப் பிறந்த ஆத்மாக்களையெல்லாம் ஆட்கொண்டு உய்விக்கும் பொருட்டுப் பரமபதத்திலிருந்து (பயிர் செய்பவன் பயிர்த்தலையிலே குடிசை வகுத்துக்கொண்டு அதில் இருந்துகொண்டு அப்பயிரைப் பாதுகாப்பதுபோல்) இந்நிலவுலகத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கிற திவ்யதேசங்கள் நூற்றெட்டினுள் முதலதும் தலைமைபெற்றதுமான திருவரங்கம் பெரிய கோயிலில் எழுந்தருளியிருக்கிற அடியவர்க்கெளியனான நம்பெருமாள் விஷயமாக முதல் மூன்று திருமொழிகள்; திருவேங்கடமுடையான் விஷயமாக நான்காவது திருமொழி; மலைநாட்டில் திருவித்துவக்கோட்டம்மான் விஷயமாக ஐந்தாவது திருமொழி; ஆக இப்படி அர்ச்சாவதாரங்களிலே ஈடுபட்டு பக்திபரீவாஹமாக விண்ணப்பஞ்செய்த குலசேகராழ்வார், அர்ச்சாவதாரங்களிற் போலவே விபவாவதாரங்களுள்ளும் ராமாவதாரத்திலும் க்ருஷ்ணாவதாரத்திலும் மிக்க ஈடுபாடுடையராதலால், அவற்றிற் கருத்தைச் செலுத்தி, அவற்றுள்ளும் தமக்குச் சிறிதுகாலமே முந்தினதாதலாற் சமீபித்ததான க்ருஷ்ணாவதாரத்தை நினைத்து, அதில் அப்பெருமானைத் தாம் அநுபவிக்கப்பெறாமற் போனமைக்கு இரங்கி, அவ்விரக்கத்தை அவ்வவதாரத்திலே ஆய்ச்சியர்கள் கண்ணபிரானோடு ஊடல் கொண்டு உரைத்த பேச்சுக்களால் ஆறாந்திருமொழியையும், கண்ணபிரானுடைய குழந்தைத் திருவிளையாடல்களை யசோதை கண்டு களித்தாற்போலத் தேவகிதானுங்கண்டு களிக்கப்பெறாமல் இழந்த தேவகிப்பிராட்டி பின்பு கண்ணனைக் கண்டபொழுது கழிவிரக்கத்தோடு பேசின பேச்சுக்களால் ஏழாந்திருமொழியையும், அதன்பிறகு ஸ்ரீராமாவதாரத்தில் மனஞ்செல்லப்பெற்றவராய், அவ்வவதாரத்தில் கௌஸல்யை பெற்ற பேற்றைக்கருதி அவள் அவ்விராம்பிரானைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டுக்கூறின முகத்தால் எட்டாவது திருமொழியையும், தாம் அக்காலத்தில் இராமபிரானை அநுபவிக்கப்பெறாமல் இழந்தது—மைந்தனை அப்பெருமானைப் பாலப்பிராயத்திலெல்லாம் அநுபவித்து யௌவனபருவத்தில் அநுபவிக்கப்பெறாதே இழந்த தந்தையான தசரதசக்கரவர்த்தியின் தன்மை போலுதலால், இராமன் வனவாஸம் புகுமளவில் அச்சக்கரவர்த்தி அப்பிரிவை ஆற்றமாட்டாது புலம்பிய புலம்பல் முகமாக ஒன்பதாந்திருமொழியையும், செல்வச்செருக்காலும் அதிகாரத்தாலும் அஹங்கார மமகாரங்களை அடைதற்குரிய ராஜகுலத்திலே பிறந்திருந்தும் பகவானுடைய கருணையினாலும் ஆசார்யோபதேசத்தாலும் அந்த அபிமானங்கள் சிறிதுமில்லாதொழியப் பகவானிடத்திற் பக்தியையும் அப்பெருமானது அடியார்களிடத்திற் ப்ரீதியையுமே விசேஷமாகப் பெற்றவரான இவ்வாழ்வார் "கற்பார் இராமபிரானையல்லால் மற்றுங்கற்பரோ" என்றபடி ஸ்ரீராமாவதார வைபவத்தில் மிகவும் ஈடுபட்டு எப்பொழுதும் ஸ்ரீராமாயணத்தையே பாராயணஞ் செய்பவராய் எழுந்தருளியிருந்தமையால் அந்த ஸ்ரீராமாயண கதையைப் பின்புள்ளாரும் எளிதாக உணர்ந்து உய்யுமாறு * எல்லையில் சீர்த் தயரதன்றன் மகனாய்த் தோன்றிற்றது முதலாத் தன்னுலகம் புக்கதீறாகவுள்ள சரித்திரங்களைச் சுருக்கமாக உணர்த்தவல்ல பத்தாந் திருமொழியையும் அருளிச்செய்து இத்திவ்ய ப்ரபந்தத்தைத் தலைக்கட்டியருளினர்.

ஸ்ரீ:

# பெருமாள் திருமொழித் தனியன் உரை.

இன்னமுதமூட்டுகேனிங்கேவாபைங்கிளியே! தென்னரங்கம்பாடவல்லசீர்ப்பெருமாள்-பொன்னஞ் சிலைசேர்நுதலியர்வேள்சேரலர்கோனெங்கள் குலசேகரனென்றேகூறு.

| | |
|---|---|
| பைங் கிளியே | பசுமைதங்கிய கிளியே! |
| இன் அமுதம் ஊட்டுகேன் | (உனக்கு) இனிமையானதோர் அம்ருதம் உண்ணத்தருகிறேன்; |
| இங்கே வா | என்னருகே வருவாயாக; |
| தென் அரங்கம் | தென் திருவரங்கத்தைக்குறித்து |
| பாட வல்ல | (இனிய கவிகளை) அருளிச் செய்யவல்ல |
| சீர் | கல்யாண குணசாலியான |
| பெருமாள் | மஹாநுபாவர்—, |
| பொன் அம் சிலை சேர் நுதலியர் வேள் | விரும்பத்தக்கதாய் அழகியதான புருவத்தை நெற்றியிலே யுடைய மாதர்கட்கு மநோஹரரான—, |
| சேரலர் கோன் | சேரவம்சத்தவர்களுக்கெல்லாம் ராஜா—, |
| எங்கள் குலசேகரன் | ப்ரபந்நரான நம்முடைய குலத்துக்குச் சிரோபூஷணமான குலசேகராழ்வார் |
| என்றே கூறு | என்று இதையே நீ வாய்பிதற்ற வேணும். |

* * * ஸ்ரீராம பக்தரான குலசேகரப்பெருமாள் அவ்விராமபிரானது திருநாமங்களைக் கிளிக்குக் கற்பித்துவைத்து அதன் முகத்தினின்று அவற்றைக் கேட்க விரும்புமாபோலே, குலசேகர பக்தரானவர்கள் அக்குலசேகருடைய திருநாமங்களைக் கிளிக்குக் கற்பித்து அதன் முகமாகக்கேட்க விரும்புகிறபடி. "பொன்னஞ்சிலை சேர்" என்றவிடத்து, சிலை என்ற சொல்—வில் போன்ற புருவத்துக்கு வாசகமாதலால், உவமவாகு பெயர்.

ஆரங்கெடப்பரனன்பர்கொள்ளாரென்றவர்களுக்கே *
வாரங்கொடுகுடப்பாம்பிற்கையிட்டவன்—மாற்றலரை *
வீரங்கெடுத்தசெங்கோல்கொல்லிகாவலன் வில்லவர்கோன் *
சேரன்குலசேகரன்முடிவேந்தர்சிகாமணியே.

| | |
|---|---|
| ஆரம் கெட | நவரத்தின மாலையொன்று கெட்டுப்போக, |
| (அதனை ஸ்ரீவைஷ்ணவர்கள் களவு செய்ததாகக் கள்ள மந்திரிகள் கூற) | |
| அவர்களுக்கே வாரம் கொடு | அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் விஷயத்திலே பக்ஷபாதம் பூண்டு |
| பரன் அன்பர் கொள்ளார் என்று | "பாகவதர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் களவு செய்யமாட்டார்கள் என்று சொல்லி |
| குடப்பாம்பில் கை இட்டவன் | பாம்புக்குடத்தில் கையிட்டருளியவர்— |
| மாற்றலரை | சத்ருக்களை |
| வீரம் கெடுத்த செங்கோல் | பரிபவப்படுத்திய செங்கோன்மையை உடையவரும் |
| கொல்லி காவலன் | கொல்லி என்கிற நகருக்கு நிர்வாஹகரும் |
| வில்லவர் கோன் | தநுர்வித்யை பயின்றவர்களில் தலைவரும் |
| சேரன் | சேரதேசத்தரசரும் |
| முடி வேந்தர் சிகாமணி | முடியுடை மன்னர்களிற் சிறந்தவருமான |
| குலசேகரன் | குலசேகராழ்வாராவர். |

* * * குலசேகராழ்வார்க்குள்ள ஸ்ரீவைஷ்ணவ பக்ஷபாதாதிசயத்தைக் கூறுவது இது. 'ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒருபோதும் கெட்டகாரியஞ்செய்யார்' என்று குடப்பாம்பிற் கையிட்டு சபதம்பண்ணின வரலாறு சரித்திரத்தில் விசதம்.

தனியன் உரை முற்றிற்று.

குலசேகரப் பெருமாள் அருளிச்செய்த

# பெருமாள் திருமொழி.

[பெருமாள் கோயில் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்
இயற்றிய உரையோடு கூடியது.]

---

## முதல் திருமொழி—இருளிரிய.

அழகிய மணவாளனுடைய நித்யாநுபவமும் அவ்விடத்துக் கைங்கர்யபரர்களோடு சேர்ந்து வாழ்வதும் நமக்கு விரைவில் கிடைக்குமாறு எம்பெருமான் அருள்புரிய வேணுமென்று ப்ரார்த்திப்பது இத்திருமொழி.

647

இருளிரியச்சுடர்மணிகளிமைக்கும்நெற்றி இனத்துத்தியணிபணமாயிரங்களார்ந்த *
அரவரசப்பெருஞ்சோதியனந்தனென்னும் அணிவிளங்குமுயர்வெள்ளையணையைமேவி *
திருவரங்கப்பெருநகருள்தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையாலடிவருடப்பள்ளிகொள்ளும் *
கருமணியைக்கோமளத்தைக்கண்டுகொண்டு என்கண்ணிணைகளென்றுகொலோகளிக்குநாளே. ()

| | |
|---|---|
| திரு அரங்கம் | ஸ்ரீரங்கமென்கிற |
| பெரு நகருள் | பெரிய நகரத்திலே |
| இருள் இரிய சுடர் மணிகள் இமைக்கும் | இருளானது சிதறி யொழியும்படி ஒளி விடுகின்ற மணிகள் விளங்கா நிற்கப்பெற்ற |
| நெற்றி | நெற்றியையும் |
| இனம் துத்தி | சிறந்த புள்ளியையும் |
| அணி | அழகாக உடைய |
| ஆயிரம் பணங்கள் ஆர்ந்த | ஆயிரம் படங்களை உடையனும் |
| அரவு அரசன் | நாகங்களுக்குத் தலைவனும் |
| பெரு சோதி | மிக்க தேஜஸ்ஸையுடையனுமான |
| அனந்தன் என்னும் | திருவனந்தாழ்வானாகிற |
| அணி விளங்கும் உயர் வெள்ளை அணையை | அழகுமிக்கு உயர்த்தியை யுடைய வெண்ணிறமான திருப்படுக்கையிலே |
| மேவி | பொருந்தி |
| தெள் நீர் பொன்னி | தெளிந்த நீர்த்தன்மையுடைய காவிரியானது |
| திரை கையால் அடி வருட | அலைகளாகிற கைகளாலே திருவடிகளைப் பிடிக்க |
| பள்ளி கொள்ளும் | திருக்கண் வளர்ந்தருளாநின்ற |
| கரு மணியை | நீலமணி போன்றவராய் |
| கோமளத்தை | ஸௌகுமார்யமே வடிவெடுத்தவரான பெரிய பெருமாளை |
| என் கண் இணைகள் | என் கண்களானவை |
| கண்டு கொண்டு | ஸேவிக்கப்பெற்று |
| களிக்கும் நாள் | ஆனந்தமடையும் நாள் |
| என்று கொல் | எந்நாளோ! |

*** திருவரங்கம் பெரியகோயிலில் உபயகாவேரீ மத்யத்தில் திருவனந்தாழ்வான் மீது திருக்கண் வளர்ந்தருளாநின்ற அழகிய மணவாளனை அடியேன் கண்ணாரக்கண்டு களிக்கும் பாக்கியம் என்றைக்கு வாய்க்குமோ? என்கிறார். ஆயிரம் பைந்தலைய அனந்தனாகையால் ஒவ்வொரு தலையிலும் ஒவ்வொரு மாணிக்கமணி உண்டாகையால் மணிகள் எனப்பட்டது. ஒரு மணியின் சுடரே இருளனைத்தையும் ஒழிக்கவற்றாயிருக்க, ஆயிரம் மணிகளின் சுடரால் இருளிரியச் சொல்லவேண்டாவே. இமைத்தல்—விழித்தல்; அதாவது இங்கு, விளங்குதல். துத்தி- படத்தின் மேலுள்ள பொறி. மேவி என்ற வினையெச்சம் பள்ளி கொள்ளும் வினையைக்கொண்டு முடியும். பொன்னி—பொன்கொழிக்கையாலே காவிரிக்குப் பொன்னியென்று பெயராயிற்று. கனகநதீ என்றும் ஹேமாபகா என்றும் வடநூலில் வழங்கப் படுவதும் இதுவே. "பொன்னி திரைக்கையாலடிவருட" என்றது—காவிரியின் அலைகள் இனிதாக மோதிக் குளிர்ச்சி பெற்றுள்ள கரையிலே பரமஸுகமாகக் கண் வளர்ந்தருள்கின்றமையைக் கூறியவாறு. கோமளம்—வடசொல்., "கண்ணால் துகைக்க வொண்ணாத ஸௌகுமார்ய முடையவனை" என்பது வியாக்கியானம். (௧)

| | | | |
|---|---|---|---|
| மாவினை வாய் பிளந்து உகந்த மாலை | குதிரை வடிவங்கொண்டு வந்த கேசியினுடைய வாயைக் கிழித்து மகிழ்ந்த பெருமானாய் | அம் தமிழின் இன்பம் பாவினை | அழகிய தமிழ்ப்பாஷையாலாகிய ஆநந்தமயமான அருளிச்செயல் போல் போக்யனாய் |
| வேலை வண்ணனை | கடல்போன்ற வடிவையுடையவனாய் | அவ்வடமொழியை | அழகிய ஸம்ஸ்க்ருத பாஷையாலாகிய ஸ்ரீராமாயணாதிகள் போல் போக்யனாய் |
| என் கண்ணனை | 'என்னுடையவன்' என்று அபிமானிக்கக்கூடிய (ஸௌலபனான) க்ருஷ்ணனாய் | பற்று அற்றார்கள் பயில் அரங்கத்து | ஸம்ஸார பந்தம் அற்றவர்களான விரக்தர்கள் நித்திய வாஸம் செய்கிற கோயிலிலே |
| அன்று | (இந்திரன் கல் மழை பெய்வித்த) அக்காலத்திலே | அரவு அணையில் பள்ளிகொள்ளும்— | |
| | | கோவினை | ஸ்வாமியான ஸ்ரீ ரங்கநாதனை |
| வல் குன்றம் ஏந்தி | வலிய (கோவர்த்தன) மலையை (க்குடையாக) த் தூக்கி | நா உற | நாக்குத் தடிக்கும்படி |
| | | வழுத்தி | துதித்து |
| ஆவினை உய்யக் கொண்ட | பசுக்களைக் காப்பாற்றியருளின | என் தன் கைகள் | என்னுடைய கைகளானவை |
| ஆயர் ஏற்றை | இடையர் தலைவனாய் | கொய் மலர் தூய் | (காலத்தில்) பறிக்கப்பட்ட புஷ்பங்களைப் பணிமாறி |
| அமரர்கள் தம் தலைவனை | நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியாய், | கூப்பும் நாள் என்று கொல் | அஞ்ஜலி பண்ணும் நாள் எதுவோ! |

* * * குதிரை வடிவங்கொண்டு தன்னைக் கவளங்கொள்ள வந்த கேசியென்னும் அஸுரனைக் கொன்று தன்னை நித்யாநுபாவ்யனாக உபகரித்தருளினவனும, கடலைக் கண்டாற்போலே வடிவைக்கண்டபோதே தாபத்ரயமும் தீரும்படியிருப்பவனும், அரியன செய்து ஆச்ரிதரைக் காப்பாற்றினவனும் பரம போக்யனுமான ஸ்ரீரங்கநாதனை நாத்தழும்பேறத் துதித்து நன்மலர்களைக் கொணர்ந்து ஸமர்ப்பித்து 'அடியேனை ஆட்கொள்ளவேணும்' என்கிற ப்ரார்த்தனை தோற்றக் கைகூப்பி நிற்கும்படியான பாக்கியம் என்றைக்கு வாய்க்குமோ என்கிறார். எம்பெருமானுடைய ஒப்புயர்வற்ற போக்யதைக்கு அவனுடைய திவ்ய குணங்களை ப்ரதிபாதிக்கின்ற திருவாய்மொழி முதலிய திவ்ய ப்ரபந்தங்களும் ஸ்ரீராமாயணம் முதலிய இதிஹாஸ புராணங்களும் தவிர வேறொன்றும் ஒப்புச்சொல்லத் தகாமையால் "அந்தமிழின்பப்பாவினை அவ்வடமொழியை" என்றார்.

[பற்றற்றார்கள் பயிலரங்கம்.] "செற்றெயிற்று மூற்றன் மூங்கில் மூன்று தண்டர் ஒன்றினர், அற்ற பற்றர் சுற்றிவாழும் அந்தணீரரங்கமே" என்றார் திருமழிசைப்பிரானும். (௫)

651 இணையில்லாவின்னிசையாழ்கெழுமி இன்பத்தும்புருவுநாரதனுமிறைஞ்சியேத்த *
துணையில்லாத்தொன்மறைநூல்தோத்திரத்தால் தொன்மலர்க்கண்ணயன்வணங்கியோவாதேத்த *
மணிமாடமாளிகைகள்மல்குசெல்வ மதிளரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
மணிவண்ணனம்மானைக்கண்டுகொண்டு என்மலர்ச்சென்னியென்றுகொலோவணங்குநாளே.

| | | | |
|---|---|---|---|
| இன்பம் | (விஞ்ஞானத்தாலே) இன்பந்தருகின்ற | தொல் மலர்க் கண் அயன் | நித்யமான நாபிகமலத்திலுதித்த நான்முகனானவன் |
| தும்புருவும் | தும்புரு மஹர்ஷியும் | வணங்கி | நமஸ்கரித்து |
| நாரதனும் | நாரத முனிவனும் | துணை இல்லா | ஒப்பு இல்லாததும் |
| இணை இல்லா இன் இசை | ஒப்பற்றதும் போக்யமுமான இசையை | தொல் | அநாதியுமான |
| யாழ் | வீணையிலே | மறை நூல் தோத்திரத்தால் | வேதசாஸ்த்ரங்களாகிற ஸ்தோத்ரங்களால் |
| கெழுமி | நிறைத்து | ஓயாது ஏத்த | இடைவிடாமல் துதிக்கவும் |
| (விஞ்ஞானத்தைப் பண்ணிக்கொண்டு) | | மணி மாடம் மாளிகைகள் | மணிமயமான மாட மாளிகைகளையும் |
| இறைஞ்சி ஏத்த | (திருவடிகளிலே விழுந்து) வணங்கித் துதிக்கவும், | மல்கு செல்வம் | பூர்ணமான ஸம்பத்தையும் |

| | |
|---|---|
| மதில் | ஸப்தப்ராகாரங்களையுடைய |
| அரங்கத்து | கோயிலிலே |
| அரவு அணையில் பள்ளிகொள்ளும்— | |
| மணி வண்ணன் அம்மானை | நீலமணிபோன்ற திருநிறத்தையுடைய எம்பெருமானை |
| கண்டுகொண்டு | ஸேவித்து |
| என் மலர் சென்னி | என்னுடைய பூமாலை பணிந்த தலையானது |
| வணங்கும் நாள் என்று கொல் | (அவன் திருவடிகளில்) வணங்கப் பெறுவது என்றைக்கோ! |

* * *—தும்புரு நாரதர் முதலிய முனிவர்கள் பகவத்குணங்களை இனிய இசையுடன் வீணையிலேயிட்டுப் பாடிக்கொண்டும், நான்முகன் நான்கு முகங்களாலும் நான்குவேதங்களை ஓதிக்கொண்டும் வணங்கப் பள்ளிகொண்டருளாநின்ற பெரியபெருமானை நான் ஸேவிக்கப் பெறுவதும், அரசாட்சிக்கு ஏற்பப் பூமுடி சூடிக்கிடக்கின்ற என்தலை அவனுடைய திருவடியை முடிசூடப் பெறுவதும் என்றைக்கு வாய்க்குமோ? என்கிறார். இன் இசை யாழ் கெழுமி— இனிய இசையையுடைத்தான வீணையை அப்யஸித்து என்றுமாம். (௫)

652 அளிமலர்மேலயனரனிந்திரனோடு ஏனையமரர்கள்தங்குழுவுமரம்பையரும்மற்றும் *
தெளிமதிசேர்முனிவர்கள்தங்குழுவுமுந்தித் திசைதிசையில்மலர்தூவிச்சென்றுசேரும் *
களிமலர்சேர்பொழிலரங்கத்துரகமேறிக் கண்வளரும்கடல்வண்ணர்கமலக்கண்ணும் *
ஒளிமதிசேர்திருமுகமும்கண்டுகொண்டு என்னுள்ளம்மிகவென்றுகொலோவுருகுநாளே. (௬)

| | |
|---|---|
| அளி மலர் மேல் அயன் | (மதுபானத்துக்காக) வண்டுகள் படிந்திருக்கிற தாமரைப்பூவில் தோன்றிய பிரமனும் |
| அரன் | சிவனும் |
| இந்திரனோடு ஏனை அமரர்கள் தம் குழுவும் | இந்திரனோடுகூட மற்றைத் தேவர்களின் திரளும் |
| அரம்பையரும் | ரம்பை முதலிய தேவமாதரும் |
| மற்றும் | மற்றுமுள்ள |
| தெளி மதி சேர் முனிவர்கள் தம் குழுவும் | தெளிந்த ஞானத்தையுடைய (ஸநகாதி) மஹர்ஷிகளின் ஸமூஹமும் |
| உந்தி | ஒருவர்க்கொருவர் நெருக்கித் தள்ளி |
| திசை திசையில் | பார்த்த பார்த்தவிடமெங்கும் |
| மலர் தூவி | புஷ்பங்களை இறைத்துக் [கொண்டு |
| சென்று சேரும் | வந்து சேர்தற்கு இடமான |
| களி மலர் சேர் பொழில் அரங்கத்து | தேன்மிக்க மலர்களையுடைய சோலைகளையுடைத்தான கோயிலிலே |
| உரகம் ஏறி | திருவனந்தாழ்வான்மீது பள்ளிகொண்டு |
| கண் வளரும் | திருக்கண் வளர்ந்தருளாநின்ற |
| கடல் வண்ணர் | கடல்போன்ற வடிவையுடையரான பெரிய பெருமாளுடைய |
| கமலம் கண்ணும் | செந்தாமரை போன்ற திருக்கண்களையும் |
| ஒளி மதி சேர் திரு முகமும் | ஒளியையுடைய சந்திரன் போன்ற திருமுகமண்டலத்தையும் |
| கண்டு கொண்டு | ஸேவிக்கப்பெற்று |
| என் உள்ளம் | என்னுடைய மனமானது |
| மிக உருகும் நாள் என்று கொல். | மிகவும் உருகுங்காலம் என்றைக்கோ? |

* * * தேவர்களும் தேவமாதர்களும் முனிவர்களும் ஆராதனோபகரணங்களைக் கொண்டுவந்து, திரள் மிகுதியாலே ஒருவரையொருவர் நெருக்கித்தள்ளிப் புகும்படியான கோயிலிலே கண்வளர்ந்தருளாநின்ற பெரியபெருமாளுடைய செந்தாமரைக் கண்ணையும் முகசந்த்ர மண்டலத்தையும் ஸேவிக்கப்பெற்று, 'பாவியேனுக்கும் இப்பேறு வாய்த்த அதிசயம் என்கொல்!' என்று நெஞ்சுருகும்படியான நாளும் வரப்போகிறதா? என்கிறார். (௬)

653
மறந்திகழும்மனமொழித்துவஞ்சமாற்றி வன்புலன்களடக்கியிடர்ப்பாரத்துன்பம்
துறந்து * இருமுப்பொழுதேத்தியெல்லையில்லாத்தொன்னெறிக்கண் நிலைநின்றதொண்டரான *
அறந்திகழும்மனத்தவர்தங்கதியைப்பொன்னி அணியரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
நிறந்திகழும்மாயோனைக்கண்டென்கண்கள் நீர்மல்கவென்றுகொலோநிற்குநாளே. (௭)

| | |
|---|---|
| மறம் திகழும் மனம் ஒழித்து | கொடுமையால் விளங்காநின்றுள்ள மனத்தை ஒழித்து |
| வஞ்சம் மாற்றி | வஞ்சனைகளைப் போக்கி |
| வல் புலன்கள் அடக்கி | கொடிய இந்திரியங்களை அடக்கி |
| | [பட்டி மேய்ந்தபடி தவிர்த்து] |
| இடர் பாரம் துன்பம் துறந்து | (மேன்மேலும்) துக்கத்தை விளைப்பனவாய்ப் பெருஞ்சுமையாயிராநின்ற பழவினைகளை வேரறுத்து |
| இருமுப்பொழுது ஏத்தி | பஞ்சகாலங்களிலும் துதித்து |
| எல்லை இல்லா தொல் நெறிக்கண் நிலை நின்ற | அளவிறந்த பழைய மர்யாதையிலே நிலைநின்ற |
| தொண்டர் ஆன | தாஸபூதர்களான |
| அறம் திகழும் மனத்தவர் தம் | தர்மமிக்கதாயே விளங்கும் மனமுடையரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு |
| கதியை | பரமப்ராப்யனாய், |
| பொன்னி அணி அரங்கத்து | காவிரியால் அழகுபெற்ற கோயிலிலே |
| அரவு அணையில் பள்ளிகொள்ளும்— | |
| நிறம் திகழும் | அழகு விளங்காநின்றுள்ள |
| மாயோனை | ஆச்சரியனான எம்பெருமானை |
| என் கண்கள் | என்னுடைய கண்களானவை |
| கண்டு | ஸேவிக்கப்பெற்று |
| நீர் மல்க நிற்கும் நாள் என்று கொல் | ஆநந்தக் கண்ணீர் ததும்பும்படி நிற்பது என்றைக்கோ! |

*** முன்னடிகளிரண்டும் ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணங்கூறுவன. "திகழும் மனம் மறம் ஒழித்து" என்று அந்வயித்து, விளங்காநின்ற மனத்தில் நின்றும் கொடுமையை நீக்கி என்றுரைத்தலுமாம். மறம்—கொலை, கோபம், கொடுமை. இடர்ப்பாரத் துன்பம் துறந்து—"பாரமாய பழவினை பற்றறுத்து" என்கை. மஹத்தான துக்கத்தை விளைக்கக்கூடியதும், மனிதனைக் கீழே அமுக்குவதில் தலைச்சுமை போன்றதுமான பழவினையை வேரோடு களைந்து என்றபடி.

[இருமுப் பொழுதேத்தி.] இரண்டும் மூன்றும் ஐந்து; பஞ்ச காலபராயணர்களைச் சொன்னபடி. இதனைச் சிறிது விவரிப்போம்;—ஒரு தினத்தின் பகற்பொழுதை ப்ராத:காலம், ஸங்கவகாலம், மத்யாஹ்நகாலம், அபராஹ்நகாலம், ஸாயங்காலம் என்று ஐந்தாகப்பகுத்து, ஸூர்யோதயம் முதல் அவ்வாறு நாழிகை இவற்றிற்கு முறையே உரியவை என்று வரையறுத்து, அபிகமநம், உபாதாநம், இஜ்யா, ஸ்வாத்யாயம், யோகம் என்ற ஐந்து ஒழுக்கங்களையும் முறையே அந்த (ப்ராத:காலம் முதலிய) ஐந்து சிறுபொழுதிலும் அநுஷ்டிக்கும்படி பாஞ்சராத்ரம் முதலிய ஆகமங்கள் கூறும். இரவில் ஆசரிக்கவேண்டுவதும் யோகாநுஷ்டானமே; இவற்றின் விவரம் வருமாறு:—முதலாறு நாழிகையாகிய ப்ராத:காலத்திலே, ஸ்நாநம் ஸந்த்யாவந்தனம் ஜபம் முதலிய காலைக்கடன்களைச் செய்துமுடித்துத் தாம் ஆராதிக்கவேண்டிய எம்பெருமானுடைய ஸந்நிதியிற்சென்று ப்ரதக்ஷிண நமஸ்கார ஸ்தோத்ரம் முதலியவற்றால் எம்பெருமானை உகப்பிக்கவேண்டும்; இஃது அபிகமநகாலநியமம். அதற்கு அடுத்த ஸங்கவ காலத்திலே, பகவதாராதநத்துக்கு வேண்டிய சுத்ததீர்த்தம் சந்தனம் புஷ்பம் தூபதீபத்ரவ்யங்கள் முதலியவற்றையும், திருமஞ்சனத்துக்கு வேண்டிய பால் தயிர் நெய் தேன் முதலியவற்றையும் எம்பெருமானுக்கு அமுது செய்விப்பதற்கு வேண்டிய அரிசி பருப்பு கறியமுது சர்க்கரை நெய் தயிர் பழம் முதலிய போகோபகரணங்களையும் ஸம்பாதித்துத் தொகுத்து ஸித்தஞ்செய்யவேண்டும். இஃது உபாதாநகாலநியமம். மூன்றாவதான மத்யாஹ்ந காலத்திலே, மாத்யாஹ்நிகஸ்நாநமும் மாத்யாஹ்நிகச் சடங்கும்செய்து விதிமுறை வழுவாது பகவானுக்குத் திருவாராதநம் பண்ணிப் பக்குவமான உணவுகளை அமுது செய்வித்து அங்ஙனம் நிவேதித்த உணவுகளை அதிதிகளோடும் பந்துமித்ரர்களோடும் புஜிக்கவேண்டும். இஃது இஜ்யாகாலநியமம். அதற்கு அடுத்ததான அபராஹ்ந காலத்திலே, மோக்ஷமார்க்கத்துக்கு உரிய வேத வேதாந்த வேதாங்கங்களையும் இதிஹாஸ புராணங்களையும் மற்றும் உரிய நூல்களையும் தாம் கற்றலும் பிறர்க்குக் கற்பித்தலும் வேண்டும். இது ஸ்வாத்யாயகாலநியமம்.

சற்றதான ஸாயங்காலத்திலே, மாலைக்கடனாகிய ஸந்த்யாவந்தனத்தைச் செய்யத் தொடங்கி ஸூர்யாஸ்தமனமான பின்பு ஜபத்தைப் பூர்த்திசெய்து இரவு போஜநாநந்தரம் ஏகாந்தமாக இருந்து ஐம்பொறிகளை யடக்கி ப்ராணாயாமஞ்செய்து மனத்தைப் பரமாத்மாவினிடத்தே நிலைநிறுத்தி பகவத்குணாநு ஸந்தானத்தோடு பள்ளிகொள்ளவேண்டும். இது யோககாலநியமம். இவ்வாறு அநுஷ்டிக்கும் பாகவதர் பஞ்சகாலபராயணர் எனப்படுவர். (௮)

654

கோலார்ந்தநெடுஞ்சார்ங்கம்கூனற்சங்கம் கொலையாழிகொடுந்தண்டுகொற்றவொள்வாள் *
காலார்ந்தகதிக்கருடனென்னும் வென்றிக்கடும்பறவையிவையனைத்தும்புறஞ்சூழ்காப்ப *
சேலார்ந்தநெடுங்கழனிசோலைசூழ்ந்த திருவரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
மாலோனைக்கண்டின்பக்கலவியெய்தி வல்வினையேனென்றுகொலோவாழுநாளே. (௯)

| | | | |
|---|---|---|---|
| கோல் ஆர்ந்த | அம்புகளோடு கூடிய | வென்றி பறவை இவை அனைத்தும் | ஜயசீலமான பக்ஷி ராஜனும் (ஆகிய) இவையெல்லாம் |
| நெடு சார்ங்கம் | பெரியதான ஸ்ரீ சார்ங்க மென்னும் வில்லும் | புறம் சூழ் காப்ப | சுற்றுப்புறமும் சூழ்ந்துகொண்டு ரக்ஷிக்க; |
| கூன் நல் சங்கம் | வளைந்து விலக்ஷணமான ஸ்ரீ பாஞ்சஜந்யமென்னும் சங்கமும் | சேல் ஆர்ந்த நெடு கழனி | (நீர்வளத்தால்) மீன்கள் நிரம்பிய விசாலமான கழனிகளாலும் |
| கொலை ஆழி | (எதிரிகளைக்) கொலைசெய்ய வல்ல ஸுதர்சநமும் | சோலை சூழ்ந்த | சோலைகளாலும் சூழப்பட்ட |
| கொடு தண்டு | (பகைவர்களுக்குக்) கொடுந் தொழில்புரிகின்ற கௌமோதகி யென்னும் கதையும் | திரு அரங்கத்து அரவு அணையில் பள்ளிகொள்ளும்—; | |
| கொற்றம் ஒள் வாள் | வெற்றிபெற்று ஒளிமிக்க நந்தகமென்னும் வாளும் | மாலோனை | ஸர்வாதிகனான எம்பெருமானை |
| | | வல் வினையேன் | மஹாபாபியான அடியேன் |
| | | கண்டு | ஸேவிக்கப்பெற்று |
| கால் ஆர்ந்த கதி | வாயுவேகம் போன்ற மிகவும் விரைந்த நடையையுடைய | இன்பம் கலவி எய்தி | ஆநந்தமயமான ஸம்ஶ்லேஷத்தையும் பெற்று |
| கருடன் என்னும் | பெரியதிருவடி யென்னும் பேரையுடைய | வாழும் நாள் என்று கொல் | வாழ்வது என்றைக்கோ ?. |

*** பஞ்சாயுதங்களும், திருவடி விஷ்வக்ஸேனன் முதலிய நித்யஸூரிகள்களும் 'அழகிய மணவாளனுக்கு எந்த ஸமயத்தில் என்ன தீங்கு நேரிடுமோ?' என்று அதிஶங்கை பண்ணி எப்போதும் சுற்றுப்புறமும் சூழ்ந்து காவலாயிருக்கத் திருவனந்தாழ்வான் மீது திருக்கண் வளர்ந்தருளாநின்ற பெரிய பெருமாளை, ஸாம்ஸாரிக ஸுகோபபோகங்களிலேயே ருசிகண்டிருக்கும்படி மஹாபாபத்தைப் பண்ணி நித்ய கைங்கர்யத்தை இழந்து கிடக்கிற அடியேன் என்றைக்கு ஸேவித்து வாழப்போகிறேன் என்கிறார்.

இப்பாசுரத்தை அடியொற்றியே ஆழ்வான் ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில்
[illegible]
[illegible]
[illegible] ஸ்ரீ [illegible]
[illegible]"
என்ற ச்லோகமருளிச் செய்தாரென்க. (௯)

655

தூராதமனக்காதல்தொண்டர்தங்கள்குழாங்குழுமித் திருப்புகழ்கள்பலவும்பாடி *
ஆராதமனக்களிப்போடழுதகண்ணீர்மழைசோர நினைந்துருகியேத்தி * நாளும்
சீரார்ந்தமுழவோசைபரவைகாட்டும் திருவரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
போராழியம்மானைக்கண்டுதுள்ளிப் பூதலத்திலென்றுகொலோபுரளுநாளே. (௰)

| | |
|---|---|
| ஆராத காதல் மனம் | ஒருநாளும் த்ருப்தி பெறாத ஆசைகொண்ட மனத்தையுடையரான |
| தொண்டர் தங்கள் குழாம் | ஸ்ரீவைஷ்ணவர்களின் கோஷ்டியிலே |
| குழுமி | கூடி |
| திரு புகழ்கள் பலவும் பாடி | (எம்பெருமானது) கீர்த்திகளெல்லாவற்றையும் (வாயாரப்) பாடி |
| ஆராத மனம் களிப்போடு | (அவ்வளவிலும்) த்ருப்தி பெறாத மனஸ்ஸினுள்ள ஆநந்தத்தோடே |
| அழுத கண் நீர் | அழுத கண்களிலுண்டான நீர்த்துளிகள் |
| மழை சோர | மழைபோல் பெருகிவர |
| நினைந்து உருகி ஏத்தி | (எம்பெருமானை) நினைந்து (அதனாலே) மனமுருகி ஸ்தோத்திரம் பண்ணி,— |
| நாளும் | எப்போதும் |
| சீர் ஆர்ந்த முழவு ஓசை | நல்ல வாத்யங்களின் கோஷமானது |
| பரவை காட்டும் | கடலோசைபோல் முழங்கப்பெற்ற |
| திரு அரங்கத்து | ஸ்ரீரங்கத்திலே |
| அரவு அணையில் பள்ளிகொள்ளும்—; | |
| போர் ஆழி | (பகைவரோடு) யுத்தஞ்செய்வதையே தொழிலாகவுடைய திருவாழியாழ்வானை யுடையரான |
| அம்மானை | எம்பெருமானை |
| கண்டு | ஸேவிக்கப்பெற்று |
| துள்ளி | (ஆநந்தத்தாலுருப் போக்கு விடாகத்) தலைகால் தெரியாமல் கூத்தாடி |
| பூதலத்தில் | பூமியிலே |
| புரளும் நாள் என்று கொல் | (உடம்பு தெரியாமல்) புரள்வது என்றைக்கோ? |

* * * "இன்கனி தனியருந்தான்" [நல்லபொருள்களைத் தனியே அநுபவிக்கலாகாது] என்றாற்போல, பகவத்குணங்களைத் தனியே அநுபவிக்கக்கூடாதாகையால், அக்குணங்களை வாய்விட்டுக் கதறினாலன்றி த்ருப்திபெற முடியாதபடி கரைபுரண்ட காதலையுடைய பாகவதர்களின் கோஷ்டியிலே கலந்து அவர்களுடன் எம்பெருமானது கீர்த்திகளை வாயாரப்பாடி அதனால் ஆநந்தக்கண்ணீர் பெருகப்பெற்று 'நமக்குமன்றோ இவ்வநுபவம் கிடைத்தது!', என்கிற உள்ளடங்காத பேரின்பப் பெருமையாலே "மொய்ம்மாம் பூம்பொழிற் பொய்கை" என்கிற திருவாய்மொழிப்படி தலைகால் தெரியாமல் துள்ளிக்கூத்தாடி, இப்போது ஸம்ஸாரத்திலே மார்பு நெறித்திருக்கு மிருப்புத் தவிர்த்து ஆநந்த மிகுதியாலே நிலத்தில் வீழ்ந்து புரளும்படியான பாக்கியம் வாய்ப்பது என்றைக்கோ? என்கிறார்.

ஆராதமனக்காதல் = சப்தாதி விஷயங்களை எவ்வளவு அநுபவித்தாலும் எத்தனைகாலம் அநுபவித்தாலும் சிறிதும் த்ருப்தியடையாத இந்திரியங்களையுடையவர்களின் கோஷ்டியில் நின்றும் விலகி, எம்பெருமானை எவ்வளவு அநுபவித்தாலும் பர்யாப்தி பெறாத மெய்யடியார்கள் திரளிலே புக விரும்புகிறபடி. பரவை காட்டும் என்றது—கடலின் அலைகளின் கோஷத்துக்கு ஒப்பு இல்லாதாப்போலே கோயிலில் வாத்யங்களின் முழக்கத்துக்கு ஒப்பு இல்லாமையால் கடலை ஒத்திருக்கின்ற என்றவாறு. பரவை—கடல்; பரவியது; ஐ—கர்த்தாப் பொருள் விகுதி. (௯)

656 வன்பெருவானகமுய்யவமரருய்யமண்ணுய்ய மண்ணுலகில்மனிசருய்ய *
துன்பமிகுதுயரகலவயர்வொன்றில்லாச்சுகம்வளர அகமகிழுந்தொண்டர்வாழ *
அன்பொடுதென்திசைநோக்கிப்பள்ளிகொள்ளும் அணியரங்கன்திருமுற்றத்தடியார்தங்கள்*
இன்பமிகுபெருங்குழுவுகண்டு யானுமிசைந்துடனேயென்றுகொலோவிருக்குநாளே. (௰)

| | |
|---|---|
| வன் | (நைமித்திக ப்ரளயத்தில்) அழியாதிருக்கக் கடவதும் |
| பெரு | பெருமைதங்கியதுமான |
| வானகம் | ஸ்வர்க்கம் முதலிய மேலுலகங்கள் |
| உய்ய | உஜ்ஜீவிக்கவும் |
| அமரர் | தேவர்கள் |
| உய்ய | உஜ்ஜீவிக்கவும் |
| மண் உய்ய | பூலோகம் உஜ்ஜீவிக்கவும் |
| மண் உலகில் மனிசர் உய்ய | பூலோகத்திலுள்ள மனிதர்களெல்லாம் உஜ்ஜீவிக்கவும் |
| மிகு துன்பம் துயர் அகல | மிகுந்த துக்கத்தை விளைப்பதான பாவங்கள் நீங்கவும் |
| அயர்வு ஒன்று இல்லா சுகம் வளர | துக்கம் கலசாத சுகம் வளரவும் |
| அகம் மகிழும் | (எப்போதும்) மனதில் ஆனந்தத்தை யுடையரான |

| | | | |
|---|---|---|---|
| தொண்டர் | ஸ்ரீவைஷ்ணவர்கள் | அடியார் தங்கள் | ஸ்ரீவைஷ்ணவர்களுடைய |
| வாழ | உஜ்ஜீவிக்கவும் | இன்பம் மிகு பெருகுழுவு கண்டு | ஆனந்தம் மிகப் பெருகும் கோஷ்டியைச் சேவித்து |
| அன்போடு | திருவுள்ளத்தில் உகப்போடு | யானும் | அடியேனும் |
| தென் திசை நோக்கி | தெற்குத் திக்குக்கு அபிமுகமாக | இசைந்து | (அவர்களுள் ஒருவனாக) மனம் பொருந்தி |
| பள்ளி கொள்ளும் - பள்ளிகொண்டருளாநின்ற | | உடனே | அவர்களோடுகூட |
| அணி அரங்கன் | ஸ்ரீரங்கநாதனுடைய | இருக்கும் நாள் என்று கொல் | வாழ்ந்திருக்குங்காலம் எப்போதோ (வாய்க்குமோ!). |
| திரு முற்றத்து | ஸந்நிதியின் திருமுற்றத்திலே | | |

* * *—தேவர்களும் மநுஷ்யர்களும் விலக்ஷண ஸ்ரீவைஷ்ணவர்களும் வாழவும், பாவங்கள் நீங்கிப் புண்ணியங்கள் செழிக்கவுமாகக் குடதிசைமுடியைவைத்துக் குணதிசை பாதம் நீட்டி வடதிசை பின்புகாட்டித் தென்திசை இலங்கை நோக்கிப் பள்ளிகொண்டருளாநின்ற பெரியபெருமான் ஸந்நிதித் திருமுற்றத்திலே நிற்கின்ற பாகவதர்களுடைய கோஷ்டியிலே சேர்ந்து அடியேனும் அவர்களைப்போலே நின்று வாழ்வது என்றோ! என்கிறார். (ய)

657

திடர்விளங்குகரைப்பொன்னிநடுவுபாட்டுத் திருவரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
கடல்விளங்குகருமேனியம்மான்தன்னைக் கண்ணாரக்கண்டுகக்குங்காதல்தன்னால் *
குடைவிளங்குவிறல்தானைக்கொற்றவொள்வாள் கூடலர்கோன்கொடைக்குலசேகரன்சொற்செய்த
நடைவிளங்குதமிழ்மாலைபத்தும்வல்லார் நலந்திகழ்நாரணனடிக்கீழ்நண்ணுவாரே. (கக)

| | | | |
|---|---|---|---|
| திடர் விளங்கு கரை | மணற்குன்றுகள் விளங்கா நின்ற கரையையுடைத்தான | கொற்றம் ஒள் வாள் | வெற்றியும், ஒளியும் பொருந்திய வாளை யுடையவரும் |
| பொன்னி நடுவு பாடு | காவிரியின் நடுவிடத்து | கூடலர் கோன் | மதுரையிலுள்ளவர்களுக்குத் தலைவரும் |
| திரு அரங்கத்து அரவு அணையில் பள்ளிகொள்ளும்—; | | கொடை | ஔதார்யத்தையே இயற்கையாகவுடையவருமான |
| கடல் விளங்கு | கடல்போல் விளங்குகின்ற | குலசேகரன் | குலசேகரப்பெருமாள் |
| கரு மேனி | கரிய திருமேனியையுடைய | சொற்செய்த | அருளிச்செய்த |
| அம்மான் தன்னை - பெரிய பெருமாளை | | நடை விளங்கு | தமிழ் நடையானது நன்கு விளங்காநிற்கிற |
| கண் ஆர கண்டு உகக்கும் காதல் தன்னால் | கண்கள் திருப்தியடையும்படி ஸேவித்து ஆநந்திக்கவேணும் என்று உண்டான ஆசையினால் | தமிழ் மாலை பத்தும் | தமிழ்ப்பிரபந்தரூபமான இப் பத்துப்பாசுரங்களையும் |
| குடை விளங்கு | (அரசாட்சிக்கு உரிய) வெண் கொற்றக்குடையுடன் விளங்கா நிற்பவரும் | வல்லார் | ஓதவல்லவர்கள் |
| | | நலம் திகழ் நாரணன் | கல்யாண குணசாலியான ஸ்ரீமந்நாராயணனுடைய |
| விறல் தானை | பராக்கிரமம் மிக்க சேனைகளை யுடையவரும் | அடி கீழ் நண்ணுவார் | திருவடிகளில் சேரப்பெறுவர். |

அடிவரவு:—இருள் வாயெம்மான் மாவினை பிணி அளி மறம் கோல் ஊர வன் திடர் தேட்டரு.

---

## இரண்டாந் திருமொழி—தேட்டருந்திறல்.

---

பகவத்விஷயத்தோடு நின்று தரிக்கமாட்டாமல் பாகவத விஷயத்திலே தாம் பித்தேறிக் கிடக்கின்றமையை வெளியிடுகிறார் இத்திருமொழியில். பகவத் விஷயத்திலே மெய்யன்பு பூண்டவர்கள் பாகவத விஷயத்திலே ப்ரவணராகாமலிருக்கமுடியாது. பாகவத ப்ராவண்யம் அதிசயித்தாலன்றி பகவத்விஷய ப்ராவண்யம் ஸித்தி பெறாது. இவ்வாழ்வார்க்கு பகவத்விஷய

ப்ராவண்யத்திற் காட்டில் பாகவதவிஷய ப்ராவண்யமே பன்ன மடையாயிருக்கும்; ஆரங் கெடப்பரனன்பர் கொள்ளாரென் றவர்களுக்கே வாரங்கொடு குடப்பாம்பிற் கையிட்டவரிறே.

658 தேட்டருந்திறல்தேனினைத் தென்னரங்கனை * திருமாதுவாழ்
வாட்டமில்வனமாலைமார்வனை வாழ்த்திமால்கொள்சிந்தையராய் *
ஆட்டமேவியலந்தழைத்து அயர்வெய்தும்மெய்யடியார்கள்தம் *
ஈட்டங்கண்டிடக்கூடுமேல் அதுகாணும்கண்பயனாவதே. (க)

| | | | |
|---|---|---|---|
| தேட்டரும் | (தன்முயற்சியால்) தேடிப்பெறு தற்கு அருமையானவனும் | மால் கொள் சிந்தையர் ஆய் | (அவன் திறத்தில்) வ்யாமோஹம் கொண்ட மனமுடையவராய் |
| திறல் | (தன்னை முற்ற அநுபவிப்ப தற்கு உறுப்பான) வலிமைக் கொடுப்பவனும் | ஆட்டம் மேவி | (அந்த வ்யாமோஹத்தாலே நின்ற விடத்தில் நிற்கமாட்டாமல்) ஆடுவதிலே ஒருப்பட்டு |
| தேனினை | தேன் போல் பரமபோக்யனும் | அலந்து அழைத்து | (பகவந்நாமங்களை) வாய்விட்டுக் கதறிக் கூப்பிட்டு |
| தென் அரங்கனை | தென் திருவரங்கத்தில் வாழ்பவனும் | அயர்வு எய்தும் | இளைப்படைகின்ற |
| திரு மாது வாழ் வாட்டம் இல் வனமாலை மார்பனை | பெரிய பிராட்டியார் நித்யவாஸம் செய்தற்கிடமாய் வாடாமல் செவ்வி பெற்றிருக்கிற வன மாலையை அணிந்துள்ள திருமார்பை யுடையவனுமான ஸ்ரீரங்கநாதனை | மெய் அடியார்கள் தம் | உண்மையான அன்புடைய பாகவதர்களின் |
| | | ஈட்டம் | கோஷ்டியை |
| | | கண்டிட கூடும் ஏல் | ஸேவிக்கப் பெறுவோமாகில் |
| வாழ்த்தி | மங்களாசாஸநம் பண்ணி | அது காணும் கண் பயன் ஆவது | கண் படைத்ததற்குப் பயன் அதுவேயன்றோ! |

*** "பூணாரமார்பனைப் புள்ளூரும் பொன்மலையைக் காணாதார் கண்ணென்றும் கண்ணல்ல கண்டாமே" என்று 'எம்பெருமானைக் காண்பதே கண்படைத்ததற்கு ப்ரயோஜநம்' என்கிற ஸித்தாந்தம் ஸாமாந்யமானதென்றும் 'பாகவதர்களுடைய கோஷ்டியை ஸேவித்தாலன்றிக் கண்களுக்கு ஸாபல்யம் கிடையா' தென்பதே விசேஷஸித்தாந்தமென்றும் ஸாரமாகக் கண்டறிந்தவர்களுள் இவ்வாழ்வார் தலைவர் என்றுமிடம் இப்பாட்டில் விளங்கும். அடியவர்கட்குப் பரமபோக்யனான ச்ரிய:பதியை வாயாரத்துதித்து அவனிடத்திலே மிக்க மோஹங்கொண்டு அதனால் உடம்பு நின்றவிடத்தில் நில்லாது கூத்தாடி, 'ச்ரிய:பதியே! ஸ்ரீமந் நாராயணனே!' என்றிப்படி பல திருநாமங்களைக்கூறி யழைத்து, அவ்வளவில் எம்பெருமான் கண்ணெதிரே வந்து ஸேவைதந்தருளக் காணாமையாலே வருந்தி ஏங்குகின்ற பாரமார்த்திக பாகவதர்களின் கோஷ்டியை ஸேவிக்கப்பெறுவதே கண்களுக்கு ப்ரயோஜநமாமென்கிறார்.

மேவி=மேவுதல்—விரும்புதல்: "நம்பும் மேவும் நசையாகும்மே." "கண்டிடக்கூடுமேல்" என்றது — இத்தகைய மெய்யடியார்களை இவ்வுலகத்தில் காணப்பெறுவதின் அருமையை விளக்கும். (க)

659 தோடுலாமலர்மங்கைதோளிணைதோய்ந்ததும் சுடர்வாளியால் *
நீடுமாமரம்செற்றதும்நிரைமேய்த்ததும் இவையேநினைந்து *
ஆடிப்பாடியரங்கவோவென்றழைக்கும் தொண்டரடிப்பொடி
யாடநாம்பெறில் * கங்கைநீர்குடைந்தாடும்வேட்கை என்னாவதே. (உ)

| | | | |
|---|---|---|---|
| தோடு உலாம் மலர் மங்கை | இதழ்கள் மிக்கிருக்கின்ற தாமரைப்பூவிற் பிறந்த பிராட்டியினது | தோள் இணை தோய்ந்ததும் | இருதோள்களோடு அணையவு முக்கிக் கட்டிக்கொண்டதும் |

| | | | |
|---|---|---|---|
| சுடர் வாளியால் | புகரையுடைய அம்பினால் | ஓ! அரங்க!! என்று | 'ஓ அரங்கனே!' என்று (அவன் திருநாமங்களைச் சொல்லி) |
| நீடு மா மரம் செற்றதும் | நீண்ட ஸப்தஸால வ்ருக்ஷங்களைத் துளைசெய்து தள்ளியதும் | அழைக்கும் | கூப்பிடுகிற |
| நிரை மேய்த்ததும் | பசுக்கூட்டங்களை மேய்த்ததும் (ஆகிய) | தொண்டர் | கைங்கர்யத்தையே நிரூபகமாகவுடைய பாகவதர்களின் |
| இவையே நினைந்து | இப்படிப்பட்ட பகவச்சரிதங்களையே அநுஸந்தித்து | அடி பொடி | திருவடித்தூள்களிலே |
| ஆடி | சரீர விகாரம்பெற்று | ஆட நாம் பெறில் | நாம் அவகாஹிக்கப்பெற்றால் (பிறகு) |
| பாடி | (காதலுக்குப் போக்குவீடாக வாய்விட்டுப்) பாடி | கங்கை நீர் | கங்கா ஜலத்திலே |
| | | குடைந்து ஆடும் வேட்கை | அவகாஹித்து நீராடவேணுமென்கிற ஆசையானது |
| | | என் ஆவது | எதுக்கு? |

***—"பெண்டிரால் சுகங்களுய்ப்பான் பெரியதோரிடும்பைபூண்டு, உண்டிராக் கிடக்கும்போது உடலுக்கே கரைந்து நைந்து" என்றபடி அல்லும் பகலும் ஸாம்ஸாரிக சிந்தைகளே கிளரும் லௌகிகர்படி யில்லாமல் எம்பெருமானுடைய திவ்யசரிதங்களையே மாறி மாறி அநுஸந்தித்து, அவ்வநுஸந்தானத்தால் பிறந்த உகப்பு உள்ளடங்காமல் பலவகைச்சப்தங்களை வாய்விட்டுக் கதறுகின்ற ஸ்ரீவைஷ்ணவர்களின் ஸ்ரீபாததூளிகளில் அவகாஹிக்கப்பெற்றால், பிறகு 'கங்கையில் நீராடவேணும்' என்கிற விருப்பமும் வியர்த்தமேயாம் என்கிறார். (௫)

660 ஏறடர்த்ததுமேனமாய்நிலங்கீண்டதும் முன்னிராமனாய் *
மாறடர்த்ததும்மண்ணளந்ததும் சொல்லிப்பாடி * வண்பொன்னிப்பே
ராறுபோல்வருங்கண்ணநீர்கொண்டு அரங்கன்கோயில்திருமுற்றம் *
சேறுசெய்தொண்டர்சேவடிச் செழுஞ்சேறென்சென்னிக்கணிவனே. (௬)

| | | | |
|---|---|---|---|
| ஏறு அடர்த்ததும் | (நப்பின்னைக்காக) ஏழு ரிஷபங்களை வலியடக்கியதும் | வண் பேர் பொன்னி ஆறு போல் வரும் கண்ண நீர் கொண்டு | ஔதார்யத்தையும் பெருமையையுமுடைய காவேரியாறு போல் பெருகுகின்ற ஆநந்த பாஷ்பங்களாலே |
| ஏனம் ஆய் நிலம் கீண்டதும் | வராஹரூபியாய்ப் பூமியைக் கோட்டால் குத்தியெடுத்ததும் | அரங்கன் கோயில் திரு முற்றம் | எம்பெருமானது ஸந்நிதித் திருமுற்றத்தை |
| முன் இராமன் ஆய் | முன்பு சக்ரவர்த்தி திருமகனாய்ப் பிறந்து | சேறு செய் தொண்டர் | சேறாக்குகிற பாகவதர்களின் |
| மாறு அடர்த்ததும் | சத்ரு ராக்ஷஸர்களை ஒழியக் கெடுத்ததும் | சே அடி செழு சேறு | திருவடிகளால் துகையுண்ட அழகிய சேற்றை |
| மண் அளந்ததும் | (த்ரிவிக்ரமனாய்) உலகளந்ததும் (ஆகிய இந்த சரிதங்களை) | என் சென்னிக்கு அணிவன் | என்னுடைய சென்னிக்கு திலகமாகக் கொள்வேன். |
| சொல்லி பாடி | வாயாற்சொல்லி வாய்விட்டுப் பாடி | | |

***—எம்பெருமானுடைய பல அவதார சரித்திரங்களையே அநவரதம் வாயாரப் பாடிக்கொண்டு அன்பு மிகுதியால் கண்களினின்று பெரிய நதிபோலப் பரவசமாகப் பெருகுகின்ற ஆநந்த பாஷ்பங்களாலே ஸ்ரீரங்கநாதன் ஸந்நிதித் திருமுற்றத்தைச் சேறாக்குகின்ற ஸ்ரீவைஷ்ணவர்களின் திருவடிகளால் துகையுண்ட சேற்றை எனது தலைக்கு அலங்காரமாகக்கொள்வேன் என்கிறார். கண்ணநீர் எவ்வளவு அடக்கினாலும் நில்லாமல் பெருவெள்ளமிடுதற்குப் பொருத்தமான த்ருஷ்டாந்தம் காவிரியேயாம். கண்ணநீர் = (கண் அ) அ—ஆறும் வேற்றுமை யுருபு; கண்களினுடைய நீர் என்றபடி. (௬)

661 தோய்த்ததண்தயிர்வெண்ணெய்பாலுடனுண்டலும் உடன்றாய்ச்சிகண்டு *
ஆர்த்ததோளுடையெம்பிரான் என்னரங்கனுக்கடியார்களாய் *
நாத்தழும்பெழநாரணாவென்றழைத்து மெய்தழும்பத்தொழு
தேத்தி* இன்புறும்தொண்டர்சேவடி யேத்திவாழ்த்துமென்னெஞ்சமே. (௭)

| | | | |
|---|---|---|---|
| மலர் கண்ணனை | செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடையவனு மான ஸ்ரீரங்கநாதன் விஷயத்தில் | திரிந்து | (திவ்ய தேசங்கள்தோறும் ஸஞ்சரித்து |
| | | அரங்கன் எம்மானுக்கே | எமக்கு ஸ்வாமியான ஸ்ரீரங்கநாதன் விஷயத்திலேயே |
| மாலை உற்று | வ்யாமோஹத்தை அடைந்து | மாலை உற்றிடும் | பித்தேறித் திரிகின்ற |
| எழுந்து ஆடி | (இருந்தவிடத்திலிராமல்) எழுந்து கூத்தாடி | தொண்டர் | ஸ்ரீவைஷ்ணவர்களுடைய |
| | | வாழ்வுக்கு | ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மிக்கு |
| பாடி | (வாயாரப்) பாடி | என் நெஞ்சம் மாலை உற்றது | என் மனம் மயங்கிக்கிடக்கின்றது |

* * *—திருப்பாற்கடலில் பள்ளிகொள்பவனும் நறுந்தேன் மிக்க செவ்வித் துழாய் மாலையையணிந்த பெருந் திருமார்பையுடையவனும் புண்டரீகாக்ஷனுமாகிய ஸ்ரீரங்கநாதன் விஷயத்திலே மையல்கொண்டு இருந்தவிடத்திலிருக்க வொட்டாமையாலே எழுந்து ஆடுவது பாடுவதாய் விகாரப்படுகின்ற ஸ்ரீவைஷ்ணவர்களுடைய அந்த ஸ்ரீவைஷ்ணவலக்ஷ்மிக்கே என் நெஞ்சு பித்தேறு நின்றதென்கிறார். அப்படிப்பட்ட நிலைமை எமக்கு வாய்க்குமோ? என்று ஆசைகொள்ளா நின்றதென்றபடி. இரண்டாமடியில் மாத்திரம் மாலை என்பது மாலா என்ற வடசொல் விகாரம். மற்ற மூன்றடிகளிலுள்ள மாலை—மோஹம் என்னும் பொருளதான மால் என்னுஞ் சொல் இரண்டாம் வேற்றுமை யுருபேற்றது. (அ)

666 மொய்த்துக்கண்பனிசோரமெய்கள்சிலிர்ப்ப ஏங்கியிளைத்துநின்று *
எய்த்துக்கும்பிடுநட்டமிட்டெழுந்து ஆடிப்பாடியிறைஞ்சி * என்
அத்தனச்சனரங்கனுக்கடியார்களாகி அவனுக்கே
பித்தராமவர் * பித்தரல்லர்கள் மற்றையார்முற்றும்பித்தரே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| கண் பனி | ஆனந்த பாஷ்பமானது | அச்சன் | ஸ்வாமியான |
| மொய்த்து சோர | இடைவிடாமல் சொரியவும் | அரங்கனுக்கு | ஸ்ரீரங்கநாதனுக்கு |
| மெய்கள் சிலிர்ப்ப | மயிர்க்கூச்செறியவும் உடல | அடியார்கள் ஆகி | அடியவர்களாய் |
| ஏங்கி இளைத்து நின்று | நெஞ்சு தளர்ந்து களைத்துப் போய் | அவனுக்கே | அந்த ரங்கநாதன் விஷயத்திலேயே |
| எய்த்து | மிக தளர்ந்து | பித்தர் ஆமவர் | பித்தேறித் திரிகிறவர்கள் |
| கும்பிடு நட்டம் இட்டு | மஹா ஸோல்லாஸத்தோடு கூடிய நர்த்தனத்தைப் பண்ணி | பித்தர் அல்லர்கள் | பைத்தியக்காரர்களல்லர்; |
| எழுந்து ஆடி பாடி இறைஞ்சி | நின்றவிடத்து நில்லாமல் (பலவித) ஆட்டங்களாடிப் பாட்டுகள் பாடி வணங்கி, | மற்றையார் முற்றும் | (பகவத்விஷயமான இந்த வ்யாமோஹமில்லாத) மற்றபேர்களெல்லாம் |
| என் அத்தன் | எனக்குத் தந்தையாய் | பித்தரே | பைத்தியக்காரர்கள் தான். |

667 அல்லிமாமலர்மங்கைநாதன் அரங்கன்மெய்யடியார்கள்தம் *
எல்லையிலடிமைத்திறத்தினில் என்றுமேவுமனத்தனாம் *
கொல்லிகாவலன்கூடல்நாயகன் கோழிக்கோன்குலசேகரன் *
சொல்லினின்தமிழ்மாலைவல்லவர் தொண்டர்தொண்டர்களாவரே. (௰)

| | | | |
|---|---|---|---|
| அல்லி மா மலர் மங்கை நாதன் | அகவிதழ்களையுடைய சிறந்த (தாமரை) மலரில் பிறந்த பிராட்டிக்குக் கணவனுன | கொல்லி காவலன் | கொல்லிநகர்க்கு அரசரும் |
| அரங்கன் | ஸ்ரீரங்கநாதனுடைய | கூடல் நாயகன் | மதுரைக்கு அரசரும் |
| மெய் அடியார்கள் தம் | உண்மையான பக்தர்களுடைய | கோழி கோன் | உறையூருக்கு அரசருமான |
| எல்லையில் அடிமை திறத்தினில் | எல்லையில்லா சேஷவ்ருத்தியிலே | குலசேகரன் | குலசேகராழ்வாருடைய |
| என்றும் மேவு மனத்தன் ஆம் | எப்போதும் பொருந்திய திருவுள்ளத்தை யுடையவரும் | சொல்லின் | ஸ்ரீஸூக்திகளாலே அமைந்த |
| | | இன் தமிழ் மாலை வல்லவர் | இனிய தமிழ்ப்பாசுரங்களை ஓதவல்லவர்கள் |
| | | தொண்டர் தொண்டர்கள் ஆவர் | தாஸாநுதாஸராகப் பெறுவர். |

* * *—எல்லையிலடிமைத்திறமாவது—“அடியா ரடியார்தம் மடியா ரடியார்தமக்கடியா ரடியார்தம் அடியா ரடியோங்களே” என்கிற சேஷத்வகாஷ்டை. (௰)

அடிவரவு:—தேட்டு தோடேறு தோய்த்த பொய் ஆதி காரினம் மாலை மொய்த்து அல்லி மெய்.

| | | | |
|---|---|---|---|
| உண்டியே | ஆஹாரத்தையும் | அண்டம் வாழ்நன் | பரமபதத்திலே வாழ்பவனும் |
| உடையே | வஸ்த்ரத்தையுமே | வல்பேய் முலை உண்ட வாயன் | கல்நெஞ்சையுடைய பூதனையின் முலையை அமுது செய்த வாயையுடையவனுமான |
| உகந்து ஓடும் | விரும்பி(க் கண்டவிடமெங்கும்) ஓடித்திரிகிற | அரங்கன் தன் | ஸ்ரீரங்கநாதன் விஷயத்தில் |
| இ மண்டலத்தொடும் | இந்தப் பூமண்டலத்திலுள்ள ப்ராக்ருதர்களோடு | உன்மத்தன் | பைத்தியம் பிடித்தவனாயிரா நின்றேன். |
| யான் கூடுவது இல்லை—; | | | |

*** 'ஸ்ரீராமாயணம் எங்கு உபந்யஸிக்கிறார்கள்? ஸ்ரீ பாகவதம் எங்கு உபந்யஸிக்கிறார்கள்? பகவத்ஸேவை எங்கே கிடைக்கும்? பாகவதஸேவை எங்கே கிடைக்கும்?' என்று காதும் கண்ணும் நினைவெடுத்து ஓடிக்களிக்கவேண்டியது ஸ்வரூபமாயிருக்க, அஃதொழிந்து 'சோறு கொடுப்பது எங்கே? கூறை கிடைப்பது எங்கே?' என்று வாய்வெருவிக் கொண்டு பறந்தோடுகின்ற இப்பாவிகளோடு எனக்குப் பொருந்தாது. விரோதிகளைப் போக்கித் தன்னை அருள்கின்ற எம்பெருமான்குணங்களையே நினைந்து நைந்து உள்கரைந்துருகுமவன் நான் என்கிறார். (௪)

672 தீதில்நன்னெறிநிற்க அல்லாதுசெய் * நீதியாரோடும் கூடுவதில்லையான் *
ஆதியாயன் அரங்கனந்தாமரை * பேதைமாமணவாளன்றன் பித்தனே. (௫)

| | | | |
|---|---|---|---|
| தீது இல் நல் நெறி நிற்க | குற்றமற்ற நல்வழி இருக்கச் செய்தே (அவ்வழியில் போகாமல்) | ஆதி | (உலகுக்கட்கு) முதல்வனாய் |
| | | ஆயன் | ஸ்ரீக்ருஷ்ணனாய் அவதரித்து ஸர்வஸுலபனாய் |
| அல்லாது செய் நீதியாரொடும் | நல்வழிக்கு எதிர்த்தட்டானவற்றைச் செய்வதை விரதமாகக் கொண்டுள்ள ப்ராக்ருதர்களோடு | அம் தாமரை பேதை மா மணவாளன் | அழகிய தாமரைப்பூவில் அவதரித்த பிராட்டியின் வல்லபனான |
| | | அரங்கன் தன் | ஸ்ரீரங்கநாதன் திறத்தில் |
| யான் கூடுவது இல்லை—; | | பித்தன் | மோஹங்கொண்டிரா நின்றேன். |

*** தேவதாந்தரங்களைப் பற்றுகை, தீயநெறி; எம்பெருமானை ஸ்வயம் ப்ரயோஜநமாகப் பற்றுகை; நல்லநெறி; ஐச்வரியம் முதலிய க்ஷுத்ரபுருஷார்த்தங்களை விரும்பி அவற்றுக்காக எம்பெருமானைப் பற்றுகை, தீமையோடு கலசிய நல்ல நெறி—என்று கண்டுகொள்க. அநந்ய ப்ரயோஜநமாக எம்பெருமானைப் பற்றுகையாகிற பரமஸத்த மார்க்கத்தை விட்டிட்டு, ஸ்வரூப விருத்தமாக ஒழுகுகின்றவர்களோடு எனக்குப் பொருந்த மாட்டாதென்றாராயிற்று. ()

673 எம்பரத்தர் அல்லாரோடுங்கூடலன் * உம்பர்வாழ்வை ஒன்றாகக்கருதலன் *
தம்பிரானமரர்க்கு அரங்கநகர் * எம்பிரானுக்கு எழுமையும்பித்தனே. (௬)

| | | | |
|---|---|---|---|
| எம் பரத்தர் அல்லாரொடும் | என்னைப்போலே அநந்ய ப்ரயோஜநரா யிராதவர்களோடு | அமரர்க்கு | நித்யஸூரிகளுக்கு |
| கூடலன் | (நான்) கூடமாட்டேன்; | தம்பிரான் | ஸ்வாமியாய் |
| உம்பர் வாழ்வை | தேவதைகளின் ஸ்வர்க்கம் முதலிய போகங்களையும் | அரங்கம் நகர் | கோயிலிலே எழுந்தருளியிருக்கிற |
| | | எம்பிரானுக்கு | பெரிய பெருமாள் விஷயத்தில் |
| ஒன்று ஆக | ஒரு புருஷார்த்தமாக | எழுமையும் | எப்போதும் |
| கருதலன் | எண்ணமாட்டேன்; | பித்தன் | பித்தனாகா நின்றேன். |

*** ஸம்ஸாரத்தில் வெறுப்பும் கைங்கரியத்தில் விருப்பும் இல்லையாகில் ப்ரஹ்மாதிகளின் ஸம்பத்தேயாகிலும் அதை நான் த்ருணமாகவே நினைப்பேன்; நித்யஸூரிகளெல்லாம் அநுபவிக்குமாபோலே ஸம்ஸாரிகளும் இழவாமல் அநுபவிக்கும்படி கோயிலிலே வந்து ஸுலபராகக் கண்வளர்ந்தருளுமவருடைய இந்த சீர்மையை நினைத்து 'இது எத்திறம்!' என்று மோஹிப்பதே எனக்குத் தொழிலாயிருக்குமென்கிறார். (௬)

674 எத்திறத்திலும் யாரொடுங்கூடும் * அச்சித்தந்தன்னைத் தவிர்த்தனன் செங்கண்மால் *
அத்தனே! அரங்காவென்றழைக்கின்றேன் * பித்தனாயொழிந்தேன் எம்பிரானுக்கே. (எ)

| | | | |
|---|---|---|---|
| செம் கண் மால் | புண்டரீகாக்ஷனான எம்பெருமான் | அத்தனே | ஸ்வாமியே! |
| எத்திறத்திலும் | எந்த விஷயத்திலும் | அரங்கா | ஸ்ரீரங்கநாதனே! |
| யாரொடும் | கண்ட பேர்களோடே | என்று அழைக்கின்றேன் | என்று கூவாநின்றேன்; |
| கூடும் அச்சித்தந்தன்னை | சேர்ந்து கெட்டுப்போவதற்கு உருப்பான நெஞ்சை | | |
| தவிர்த்தனன் | நீக்கியருளினான்; (ஆதலால்) | எம்பிரானுக்கே பித்தனாய் ஒழிந்தேன்— | |

*** 'ஆழ்வீர்! அயலாரோடு பொருந்தாமைக்கடியான தன்மை உமக்கு வந்தபடி என்?' என்று சிலர் கேட்க; இது நானே ஸம்பாதித்துக் கொண்டதல்ல; ஸர்வேச்வரனது அருளடியாகக் கிடைத்ததென்கிறார். 'ஒரு அவைஷ்ணவனோடு பேசினால் பல புருஷார்த்தங்களும் கொள்ளைகொள்ளையாகக் கிடைக்கும்' என்று ஒரு ஆப்தன் சொன்னபோதிலும் அப்போதும் அவர்களை த்ருணமாகக் கருதி, 'ஸ்ரீரங்கநாதா! ஸ்ரீரங்கநாதா!' என்றே எப்போதும் வாய்வெருவிக் கொண்டிருக்குமாறு எம்பெருமான் எனக்கு அருள்புரிந்த பாக்கியம் மற்றையோர்க்குக் கிடைக்குமோ என்கிறார். எம்பெருமான் என்னை ஒருதடவை குளிரக் கடாக்ஷித்த மாத்திரத்திலே இந்த பாக்கியம் வாய்த்தது என்பார் "செங்கண்மால்" என்கிறார். (எ)

675 பேயரேயெனக்கியாவரும் யானுமோர் பேயனே * எவர்க்குமிதுபேசியென்?
ஆயனே! அரங்காவென்றழைக்கின்றேன் * பேயனாயொழிந்தேன் எம்பிரானுக்கே. (அ)

| | | | |
|---|---|---|---|
| யாவரும் | இவ்வுலகத்தாரடங்கலும் | இது | இவ்விஷயத்தை |
| எனக்கு | என் வரைக்கும் | பேசி | (விரிவாகச்) சொல்லுவதனால் |
| பேயரே | பைத்தியக்காரர்கள் தான்; | என் | என்ன ப்ரயோஜனமுண்டு? |
| யானும் | (அவர்களின் கருத்தில் விலக்ஷணனான) நானும் | ஆயனே | 'ஸ்ரீகிருஷ்ணனே! |
| | | அரங்கா | ஸ்ரீரங்கநாதனே!' |
| எவர்க்கும் | எவர்களுக்கும் | என்று அழைக்கின்றேன் | என்று (பகவந்நாமங்களைச் சொல்லி) கூவாநின்றேன்; |
| ஓர் பேயனே | ஒரு பைத்தியக்காரன் தான்; | எம்பிரானுக்கே பேயனாய் ஒழிந்தேன்— | |

*** "பஹிரம்பராதே நக்ராமே வஹவாஸ்து கௌபீநவாந்நர:" [கோவணம் கட்டாத ஊரில் கோமணம் கட்டுவானொருவன் பைத்தியக்காரன்போல் பரிஹஸிக்கத்தக்கவனாவன்] என்ற பழமொழியின்படி—லோகவிலக்ஷணரான நீர் பைத்தியக்காரன் என்று எல்லாராலும் இகழக்கூடியவராயிருக்கின்றீரே! என்று ஆழ்வாரை நோக்கிச் சிலர் கூற, அவர்களுக்கு விடை கூறுகின்ற பாசுரமிது. (அ)

676 அங்கையாழி அரங்கனடியிணை * தங்குசிந்தைத் தனிப்பெரும்பித்தனாம் *
கொங்கர்கோன் குலசேகரன்சொன்னசொல் * இங்குவல்லவர்க்கு ஏதமொன்றில்லையே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| அம் கை ஆழி | அழகிய திருக்கையிலே திருவாழியாழ்வானை ஏந்தியுள்ள | குலசேகரன் | குலசேகராழ்வார் |
| அரங்கன் | ஸ்ரீரங்கநாதனுடைய | சொன்ன | அருளிச்செய்த |
| அடி இணை | திருவடிகளில் | சொல் | இப்பாசுரங்களை |
| தங்கு சிந்தை | பொருந்திய மனமுடையவராய் | இங்கு | இவ்விபூதியிலே |
| தனி பெரு பித்தன் ஆம் | லோக விலக்ஷணரான பெரிய பித்தராய் | வல்லவர்க்கு | ஓதவல்லவர்களுக்கு |
| கொங்கர் கோன் | சேரதேசத்தவர்களுக்குத் தலைவரான | ஏதம் ஒன்று இல்லை | (பகவதநுபவத்திற்கு) ஒருவிதமான இடையூறும் உண்டாகமாட்டாது. |

அடிவரவு:—மெய் நூல் மாரன் உண்டி நீதில் எம்பரத்தர் எத்திறம் பேயர் அங்கை ஊன்.

---

திருவேங்கட மலையில் தமக்குள்ள ஆதராதிசயத்தை வெளியிடுபவராய்த் திருமலையோடு ஸம்பந்த முடையதொரு பிறப்பைத் தாம்வேண்டுகிறார் இத்திருமொழியில்.

677 ஊனேறுசெல்வத்து உடற்பிறவியான்வேண்டேன் *
ஆனேறேழ்வென்றான் அடிமைத்திறமல்லால் *
கூனேறுசங்கமிடத்தான்றன் வேங்கடத்து *
கோனேரிவாழுங் குருகாய்ப்பிறப்பேனே. (க)

| | | | |
|---|---|---|---|
| ஆன் ஏறு ஏழ் வென்றான் | (நப்பின்னைப் பிராட்டிக்காக) ஏழு எருதுகளை ஜயித்தவனான எம்பெருமானுக்கு | | (அன்றியும்,) |
| | | கூன் ஏறு சங்கம் | வளைந்திருக்கிற ஸ்ரீபாஞ்சஜந்யத்தை |
| அடிமை திறம் அல்லால் | கைங்கரியம் செய்வதையே நான் வேண்டுவதல்லாமல் | இடத்தான் தன் | இடத்திருக்கையிலேயுடையவனான எம்பெருமானுடைய |
| ஊன் ஏறு செல்வத்து உடல் பிறவி | (நாளுக்கு நாள்) மாம்சம் வளர்ந்து நடப்பதாகிற செல்வத்தையுடைய இம்மனித வுடம்பெடுத்துப் பிறந்தலை | வேங்கடத்து | திருவேங்கட மலையில் |
| | | கோனேரி வாழும் | திருக்கோனேரி என்கிற ஸ்வாமி புஷ்கரிணியில் வாழ்கிற |
| யான் வேண்டேன் | (விவேகம் பெற்ற) நான் (இனி) விரும்பமாட்டேன்; | குருகு ஆய் பிறப்பேன் | நாரையாகவாவது பிறக்கக் கடவேன். |

* * *—'திருவேங்கடமலையில் வாழ்ச்சி கிடைக்கப்பெற்றால், விவேகமற்றதொரு திர்யக்ஜாதியாகப் பிறப்பதும் அடியேனுக்குப் பரமோத்தேச்யமாகும். அத்திருமலை வாழ்ச்சிக்கு விரோதியான இம்மானிட வுடற்பிறவி எனக்கு ஒருநாளும் வேண்டா' என்கிறார். அடிமைத் திறமாவது—திருவடி திருவனந்தாழ்வான் இளையபெருமாள் முதலானவர்கள் போலப் பலபடியாலும் ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா வடிமைசெய்யும் வகை.

கோனேரி=ஸ்வாமி புஷ்கரிணி. இப்பெயர் ஸர்வலோக நிர்வாஹகனான எம்பெருமானுக்கு மிகவும் பிரியமான தடாகமெனப் பொருள்படும். அன்றி, எல்லாத் தீர்த்தங்களினும் தலைமைபெற்ற தீர்த்தமென்றும் பொருளாகலாம். இந்த ஸ்வாமி புஷ்கரிணியின் சிறப்பு, வராஹ புராணம் முதலியவற்றில் பரக்கக் காணத்தக்கது. திருமலையில் ஸந்நிதிக்கு அருகி லுள்ள பிரதானமான திவ்யதீர்த்தம் இது.

"உடற்பிறவி யான் வேண்டேன்" என்று பிறவியை இகழ்ந்தவர்தாமே "குருகாய்ப் பிறப்பேனே" என்று பிறவியை விரும்பினமையால், அங்கே பிறப்பது பிறப்பன்று; அது விராஜநதியைச் சேர்ந்து வைகுண்டத்தில் வாழ்வதொக்குமென்று கருதினர் என்பது விளங்கும். ஊன், ஆன், கோன் என்பவற்றில், ன்—சாரியை. குருகு என்ற சொல்—அன்னம் க்ரௌஞ்சம் என்ற நீர்வாழ்பறவைகளைக் குறிப்பதாகவும் பறவைப்பொதுப்பெயராகவும் வழங்கும்.

678
ஆனாதசெல்வத்து அரம்பையர்கள்தற்சூழ* வானாளுஞ்செல்வமும் மண்ணரசும்யான்வேண்டேன்*
தேனார்பூஞ்சோலைத் திருவேங்கடச்சுனையில் * மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேனே. (உ)

| | | | |
|---|---|---|---|
| ஆனாத செல்வத்து | அழியாத (பெருவளமாகிய) சம்பத்தையுடைய | தேன் ஆர் பூ சோலை | தேன் மிக்க மலர்களுள்ள சோலைகளையுடைய |
| அரம்பையர்கள் | அப்ஸரஸ் ஸ்த்ரீகள் | திருவேங்கடம் | திருவேங்கட மலையிலிருக்கின்ற |
| தன் சூழ | தன்னைச் சூழ்ந்து நிற்க | சுனையில் | சுனைகளிலே |
| வான் ஆளும் | மேலுலகத்தை அரசாளுகின்ற | மீன் ஆய் பிறக்கும் | ஒரு மீனாகப் பிறக்கத்தக்க |
| செல்வமும் | ஐச்வர்யத்தையும் | விதி | பாக்கியத்தை |
| மண் அரசும் | இப்பூலோகத்தை அரசாளும் ஆட்சியையும் | உடையேன் ஆவேன் | உடையவனாகக்கடவேன். |
| யான் வேண்டேன் | (ஒருங்கு சேர்ந்து கிடைப்பதாயினும்) யான் விரும்பமாட்டேன்; | | |

* * *—'இந்திரன் முதலிய தேவாதி தேவர்களின் பதவிகளும் இவ்வுலகத்து அரசாட்சியுமாகிய இரண்டும் ஒருங்கு கிடைத்தாலும் வேண்டா' என்று விலக்குகின்றார். அரம்பையர்கள்—ரம்பை முதலியோர். இரண்டாமடியிலுள்ள சொற்போக்கிலும், இவை எனக்கு ஏககாலத்திலே கிடைத்தாலும் வேண்டா வென்பதும், இவற்றை யான் வேண்டாமைக்குக் காரணம் இவை கிடையாமையன்று, இவற்றில் எனக்கு விருப்பமில்லாமையே என்பதும் தோன்றும். முக்தியின் மஹாநந்தத்தை நோக்குங்கால் இவ்விரண்டும் சிற்றின்பமேயாதலும், சாச்வதமான அத்யந்தாநந்தத்தை நோக்குங்கால் இவை அழிவுள்ளனவேயாதலும், ஆத்மாவைக் கரும பந்தங்களினின்று விடுவிக்கின்ற அவ்வீட்டு நிலைபோலன்றி இவை பந்தங்களை உறுதிப்படுத்துதலில் பொன்விலங்கும் இருப்புவிலங்கும் போலத் தம்முள் ஒப்பனவேயாதலும் கருதத்தக்கன. தேனார்—வண்டுகள் ஆரவாரிக்கின்ற என்றுமாம். சுனை—மலையில் நீரூற்றுள்ள குளம்.

கீழ் "குருகாய்ப் பிறப்பேனே" என்றவர், அதற்கு இறகுகள் இருப்பதால் அது அத்திருமலையை விட்டுப் பறந்து வேற்றிடத்திற்குச் சென்றிடக்கூடுமெனக் கருதி, அங்ஙனமன்றி அத்திருமலையிலேயே பிறப்பு வாழ்ச்சி இறப்புகளையுடைய மீனாய்ப் பிறப்பேனாகவென்று இப்பாட்டில் வேண்டுகின்றார். குருகாய்ப் பிறத்தலோடு அதற்கு இரையாகின்ற மீனாய்ப் பிறத்தலோடு இவர்க்கு வாசியில்லை; திருமலையில் ஏதேனும் ஒரு ஜன்மத்தையே அபேக்ஷிப்பவராதலால்: "எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனு மாவேனே" என்பர் பின்னும். (ரு.)

679 பின்னிட்டசடையானும் பிரமனுமிந்திரனும் *
துன்னிட்டுப்புகலரிய வைகுந்தநீள்வாசல் *
மின்வட்டச்சுடராழி வேங்கடக்கோன்தானுமிழும் *
பொன்வட்டில்பிடித்துடனே புகப்பெறுவேனாவேனே. (சு.)

| | | | |
|---|---|---|---|
| பின்னிட்ட சடையானும் | திரித்துவிட்ட சடையையுடைய ருத்ர சிவனும் | மின் வட்டம் சுடர் ஆழி | மின்னலின் வடிவத்தைப்போல சோதியையுடையதாய் விளங்குகின்ற வட்டவடிவமான சக்கராயுதத்தையுடைய |
| பிரமனும் | சதுர்முகனும் | வேங்கடம் கோன் தான் | திருவேங்கடமுடையான் |
| இந்திரனும் | தேவேந்திரனும் | உமிழும் | வாய்நீருமிழ்கின்ற |
| துன்னிட்டு | நெருங்கி | பொன் வட்டில் | தங்க வட்டிலை |
| புகல் அரிய | உள்ளே புகுவதற்கு சாத்தியமல்லாமலிருக்கின்ற | பிடித்து | கையிலேந்திக்கொண்டு |
| வைகுந்தம் நீள் வாசல் | பூலோக வைகுண்டமாகிய திருமலையிலுள்ள திருக்கோயிலின் நீண்ட திருவாசலிலே | உடனே புக பெறுவேன் ஆவேனே | அந்தரங்க பரிஜநங்களுடனே நானும் உள்ளே புகும் பாக்கியத்தைப் பெறக்கடவேன். |

* * *—எம்பெருமானுக்கு அந்தரங்க கைங்கரியம் செய்யப் பெறுவதுண்டானால் மநுஷ்ய ஜன்மமேயாகிலும் அமையும் என வேண்டுகின்றார். பிரமன் சிவன் இந்திரன் முதலிய தலைமைத்தேவர்கள் திருவேங்கடமுடையானைச் சேவித்தலில் விருப்பத்தால் அங்குவந்து அம்மருங்கிலேயே மிகுதியாகக் கூடியுள்ள அடியார்களின் பெருங்கூட்டத்தின் நடுவில் சிக்கி நெருக்குண்டு உள்ளேபுகமுடியாமல் தடுமாறப்பெற்ற அத்திருமலையின் கோயில்வாசலில் யான் அப்பெருமானுக்கு அந்தரங்க கிங்கரனாய் அவன் வாய்நீருமிழும் பொற்காளாஞ்சியை ஏந்திக்கொண்டு செல்லுமளவில், "இவர் அந்தரங்க கைங்கரியபரர்" என்று அனைவரும் விலகி வழிவிட, அர்ச்சக பரிசாரகர்களுடனே யானும் தடையின்றி எளிதில் இனிது உள்ளே புக்கு கர்ப்பக்ருஹத்திற் சேர்ந்து அருகில் நின்று கைங்கரியம்பண்ணப் பெறுவேனாகவேண்டுமென்று பிரார்த்திக்கின்றார்.

பின்னிட்ட—பின்னிய; இடு—துணைவினை. பின் இட்ட என்று பிரித்து, பின்னே தொங்கவிட்ட சடையையுடையவன் என்றலுமாம். இங்ஙனம் 'பின்னிட்ட' என்றதைச் சடைக்கு விசேஷணமாக்காமல் சடையானுக்கு விசேஷணமாக்கி, தந்தையான நான்முகன் முன்னேபோகப் பின்னே செல்கின்றவன் புத்திரனான ருத்ரன் என்று உரைத்தலு முண்டு. கீழ் "மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேன்" என்றவர், மீனானது நீர்நிலையைப்பற்றியே உயிர்தரிக்கவேண்டிவருமேயென்று ஒரு கைங்கரியபரனாகப் பிறக்கவேணுமென்று அபேக்ஷித்தார். வட்டில்—இங்கே, படிக்கம். உடனே—சீக்கிரமாக எனினுமாம். 'வாசல் புகப்பெறுவேன்' என்று அந்வயம். (௫)

680 ஒண்பவளவேலை உலவுதண்பாற்கடலுள் *
கண்துயிலும்மாயோன் கழலிணைகள்காண்பதற்கு *
பண்பகரும்வண்டினங்கள் பண்பாடும்வேங்கடத்து *
செண்பகமாய்நிற்கும் திருவுடையேனாவேனே. (௬)

| | | | |
|---|---|---|---|
| ஒண் பவளம் வேலை உலவு | ஒளியுள்ள பவழக்கொடிகளைக் கரையிலே கொணர்ந்து கொழிக்கிற (அலைகள்) உலாவுகிற | காண்பதற்கு | சேவிக்கும்படியாக, |
| | | பண் பகரும் வண்டு இனங்கள் | இசையையே பேசுகிற வண்டுகளின் கூட்டங்கள் |
| தண் பாற்கடலுள் | குளிர்ந்த திருப்பாற்கடலிலே | பண் பாடும் வேங்கடத்து | பண்ணிசை பாடப்பெற்ற திருமலையிலே |
| கண் துயிலும் | யோக நித்திரை செய்தருளா நின்ற | செண்பகம் ஆய் நிற்கும் திரு உடையேன் ஆவேன் | சண்பக மரமாய் நிற்கும் பாக்கியமுடையேனாகக் கடவேன். |
| மாயோன் | ஆச்சரிய சக்தியுக்தனான எம்பெருமானுடைய | | |
| கழல் இணைகள் | இரண்டு திருவடிகளை | | |

* * *—ஜங்கமமானதொரு பிறப்புவேண்டுமென்பதில்லை; திருவேங்கடமலையில் இருப்பு கொள்ளும்படியாக அங்கு நிற்பதொரு ஸ்தாவரமாகவாயினும் நான் ஆகவேண்டுமென்று அபேக்ஷிக்கின்றார். "வானவர் வானவர்கோனொடும் சிந்து பூமகிழும் திருவேங்கடம்" என்றபடி பரமபதத்திலுள்ளார் புஷ்பவர்ஷம் வர்ஷிக்கின்ற இடமாதல்பற்றிப் புஷ்பமண்டபமெனப்படுகின்ற திருமலையிலே எம்பெருமானுக்குப் புஷ்பகைங்கரியஞ்செய்வது விசேஷமாதலால் அக்கைங்கரியத்துக்கு உபயோகப்படுவதொரு மரமாதலை வேண்டினரென்க. பலவகைப் புஷ்பங்களுள் சண்பகமலர் எம்பெருமானது திருவுள்ளத்துக்கு மிகவும் உகப்பாதலைப் பெரியாழ்வார் பூச்சூட்டல் திருமொழியில் "தேனிலினிய பிரானே! செண்பகப்பூச் சூட்டவாராய்" என்று இதனை முதலிற்கூறியதனாலும் உணர்க. கீழ்ப்பாட்டில் விரும்பின கைங்கரியம் கிடைத்தால் வட்டிலைக் களவுசெய்ய ஆசைதோன்றிச் சிறையிருக்க நேரிடும் என நினைத்து சண்பகமாமாய்ப் பிறக்கவேணுமென்று அபேக்ஷித்தபடி. (௬)

* * *—"தம்பகமாய் நிற்கும் தவமுடையேனாவேன்" என்றவர் சிறிது யோசித்த வளவில், அரசாங்கத்தார், மலையிலுள்ள செடி செட்டுகளை அடிக்கடி சோதிப்பவராதலால் திமி ரென்று அவர்கள் தம்பகத்தைக் களைத்தெறிந்திடக் கூடுமெனவும், அதுதானே விரைவில் நிந் தொழியக்கூடுமெனவும் நினைத்து, அங்ஙனன்றி என்றும் ஒருபடியாயிருக்கும்படி அத்திரு மலையின் ஒருபாகமாகக் கடவேனென்று அபேக்ஷிக்கின்றார். மூன்றிரண்டடிகளால் தேவ லோக போகத்தில் தமக்கு எள்ளளவும் ஆசையில்லாமையை வெளியிட்டார். (சு)

683 வானாளும்மாமதிபோல் வெண்குடைக்கீழ் * மன்னவர்தம்
கோனாகிவீற்றிருந்து கொண்டாடும்செல்வறியேன் *
தேனார்பூஞ்சோலைத் திருவேங்கடமலைமேல் *
கானாறாய்ப்பாயும் கருத்துடையேனாவேனே. (எ)

| | | | |
|---|---|---|---|
| வான் ஆளும் மா மதி போல் | ஆகாயத்தைத் தனக்கு இடமாகக்கொண்டு விளங்கு கின்ற பூர்ண சந்திரன் போன்ற | செல்வு | செல்வத்தை |
| வெண் குடை கீழ் | ஒப்பற்ற வெண்கொற்றக் குடையின் கீழ் | அறியேன் | (யான் ஒரு பொருளாக) மதிக்கமாட்டேன்; |
| மன்னவர் தம் கோன் ஆகி வீற்றிருந்து | ராஜாதி ராஜனாய்ப்பெருமை தோன்ற இருந்து | தேன் ஆர் பூ சோலை திருவேங்கடம் மலை மேல் | தேன்மிக்க மலர்களுள்ள சோலைகளையுடைய திருமலையின் மேல் |
| கொண்டாடும் | (அனைவராலும்) கொண்டாடப் படுவதற்குக் காரணமான | கான் ஆறு ஆய் பாயும் | ஒரு காட்டாறாய்ப்பெருகும்படியான |
| | | கருத்து | அத்யவஸாயத்தை |
| | | உடையேன் ஆவேன் | உடையவனாகின்றேன். |

* * *—கீழ்ப்பாட்டில், பொற்குவடாக வேணுமென்று பாரித்தார்; சிறிது யோசித்த வாறே, அதனினும் ஓர் அநுபபத்தி தோன்றிற்று: அதாவது—புதிதாகத் தேவாலயங்கள் கட்டுபவர்கள் பெரும்பாலும் மூலவிக்ரஹம் ஏறியருளப் பண்ணுவதற்காக மலை முகடுகளி னின்று பெரும் பெரும் பாறைகளை உடைத்துக் கொண்டு போகிற வழக்கமுளதாதலால் அது வும் ஏற்றதல்லவென்று தோன்றிற்று. தோன்றவே, அங்ஙனமன்றி, ஒருவராலும் பெயர்த் துக்கொண்டு போகக் கூடாததான கானாறாகப் பிறக்கவேணுமென்று அபேக்ஷிக்கிறார் இதில்.

684 பிறையேறுசடையானும் பிரமனுமிந்திரனும் *
முறையாயபெருவேள்விக் குறைமுடிப்பான்மறையானான் *
வெறியார்தண்சோலைத் திருவேங்கடமலைமேல் *
நெறியாய்க்கிடக்கும் நிலையுடையேனாவேனே. (அ)

| | | | |
|---|---|---|---|
| பிறை ஏறு சடையானும் | இளஞ் சந்திரன் ஏறியிரா நின்ற ஜடையையுடைய சிவனும் | மறை ஆனான் | வேதங்களிற் பரம்பொருளாகக் கூறப்படுபவனுமான எம்பெருமானுடைய |
| பிரமனும் | ப்ரஹ்மாவும் | வெறி ஆர் தண் சோலை | பரிமளம் மிக்க குளிர்ந்த சோலைகளையுடைய |
| இந்திரனும் | தேவேந்திரனும் | | திரு வேங்கடம் மலை மேல்—; |
| முறை ஆய | தம் தமது யோக்யதைக்குத் தக்கபடி செய்கின்ற | நெறி ஆய் கிடக்கும் | (போகிற) வழியாய்க் கிடக்கின்ற |
| பெரு வேள்வி | பெரிய யாகங்களின் பயனாக | நிலை | நிலைமையை |
| குறை முடிப்பான் | (அவர்களது) குறையைத் தீர்த்து அவர்கள் கோரிக் கையைத் தலைக்கட்டுவிப்பவ னும் | உடையேன் ஆவேன் | உடையவனாகக்கடவேன், |

* * *—இப்பாட்டில் "கானாறாய்ப் பாயுங் கருத்துடையேனாவேனே" என்று பாரித்தவர் சற்று ஆராய்ந்ததில் அது தன்னிலும் ஓர் குறையுணர்ந்தார்; ஆறு எப்போதும் ப்ரவஹிக்கக்கூடியதல்ல; சில காலங்களில் வற்றிப்போம்; அப்போது திருமலை வாழ்ச்சி இழந்ததாம் எனநினைத்தார். அங்ஙனமன்றி எப்போதும் ஒரு தன்மையாகத் திருவேங்கடமுடையானை ஸேவிக்கவருகின்ற பாகவதர்களின் ஸ்ரீபாததூளி படும்படி வழியாய்க்கிடக்கும் நிலைமை தமக்கு வாய்க்கவேண்டுமென்று பிரார்த்திக்கின்றார் இதில்.

குறைமுடிப்பான்—இது இரட்டுறமொழிதலாய், குறையைத் தீர்ப்பவன், வேண்டுகோளைப் பூர்த்திசெய்பவன் எனப் பொருள்தரும். அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் செய்பவன் என்கை. (௮)

685 செடியாயவல்வினைகள் தீர்க்கும்திருமாலே *
நெடியானேவேங்கடவா நின்கோயிலின்வாசல் *
அடியாரும்வானவரும் அரம்பையருங்கிடந்தியங்கும் *
படியாய்க்கிடந்து உன்பவளவாய்காண்பேனே. (௯)

| | | | |
|---|---|---|---|
| செடி ஆய | செடிபோல் அடர்ந்துள்ள | அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்து இயங்கும் படி ஆய் கிடந்து | பாகவதர்களும் மற்றைத்தேவர்களும் அப்ஸரஸ் ஸ்த்ரீகளும் இடைவிடாது ஸஞ்சரிக்கப்பெற்ற படியாய்ப் பொருந்தி |
| வல் வினைகள் | கொடிய கருமங்களை | | |
| தீர்க்கும் | (ஆச்ரிதர்க்குப்) போக்கியருள்கிற | | |
| திரு மாலே | ச்ரிய:பதியான பெருமானே! | உன் பவளம் வாய் காண்பேன் | உனது பவழம்போன்ற திருவதரத்தைக் காண்பேனாகக்கடவேன். |
| நெடியானே | பெரியோனே! | | |
| வேங்கடவா | திருவேங்கடமுடையானே! | | |
| நின் கோயிலின் வாசல் | உனது ஸந்நிதியின் உள் வாசலிலே | | |

* * *—இப்பாட்டில் "நெறியாய்க்கிடக்கும் நிலையுடையேனாவேனே" என்று திருமலைக்கு வழியாகத் தானாகவேணுமென்று அபேக்ஷித்தவர் சிறிது ஆராய்ந்ததில் அது தன்னிலும் ஓர் குறை கண்டார்; வழியென்பது அவரவர்களுடைய ஸௌகரியத்துக்குத் தக்கபடி மாறுபடும்; கீழ்த்திருப்பதியிலிருந்து திருமலைக்குப் போகும்வழி மிக வருத்தமாயிருக்கிறதென்று யாத்திரிகள் சந்த்ரகிரி வழியாகப் போகக்கூடும்; ஓரிடத்திற்கு ஒன்றுதான் வழியென்று சொல்ல முடியாதாகையாலும், வழியானது விலகி நிற்பதாகையாலும், வழியாக வேணுமென்று விரும்புவதிற் காட்டிலும் எம்பெருமானது திருவருள் நோக்கம் படியுமாறு அவன் கண்முகப்பிலே மெய்யடியாரோடு பிறரோடு வாசியற எல்லாரும் இடைவிடாது ஸஞ்சரிக்கும்படியான ஓர் அசேதநப்பொருளாகி, அதிலே உன் பவளவாய் காணும்படியானதொரு சைதந்யத்தையும் பெறக்கடவேனென்று தமது விசேஷமான விருப்பத்தை விண்ணப்பஞ் செய்கிறார் இதில். இப்பாசுரத்தை அடியொற்றியே விஷ்ணுவாலயங்களிற் கோயிலினுள் வாசற்படி 'குலசேகரப்படி' என்று இவர்பெயரையிட்டு வழங்கப்படும் என்பது ஸம்ப்ரதாயம். (௯)

686 உம்பருலகாண்டு ஒருகுடைக்கீழுருப்பசிதன் *
அம்பொற்கலையல்குல் பெற்றாலுமாதரியேன் *
செம்பவளவாயான் திருவேங்கடமென்னும் *
எம்பெருமான்பொன்மலைமேல் ஏதேனுமாவேனே. (௰)

| | | | |
|---|---|---|---|
| உம்பர் உலகு | மேலுலகங்களை யெல்லாம் | அம் | அழகிய |
| ஒரு குடை கீழ் | ஒரு கொற்றக் குடையின் நிழலிலே | பொன் கலை அல்குல் | பீதாம்பர மணிந்த அல்குலை |
| ஆண்டு | அரசாண்டு | | |
| உருப்பசி தன் | ஊர்வசியினுடைய | | |

| | | | |
|---|---|---|---|
| பெற்றாலும் ஆதரியேன் | அடையப் பெறினும் (அதனை) விரும்பமாட்டேன்; | திருவேங்கடம் என்னும் பொன் மலைமேல் | திருவேங்கட மென்ற பெயரை யுடைய அழகிய திருமலை யின் மேல் |
| செம் பவளம் வாயான் | சிவந்த பவழம்போன்ற வாயை யுடையனான | ஏதேனும் ஆவேன் | ஏதேனுமொரு பதார்த்தமாகப் பிறக்கக்கடவேன். |
| எம்பெருமான் | என்று அப்பனுடைய | | |

* * *—இப்பாட்டில் படியாகக் கிடக்கவேணுமென்று ப்ரார்த்தித்தது எம்பெருமானுடைய பவளவாய் காண்பதற்காக; அப்புருஷார்த்தம் கிடையாதொழியினு மொழியும்; ஏனெனில்; திருமலையில் ஸந்நிதிக்குள் கருங்கல்படியிருப்பது திருவேங்கட முடையானுடைய செல்வத்திற்குத் தகாது என்று மஹாப்ரபுக்கள் வந்து அப்படியை ஸ்வர்ணகவசத்தால் ஆவரிக்கக் கூடும். அப்போது எம் அப்பன் திருமுகமண்டல ஸேவையை இழந்தோமாவோம்; ஆகையால் படியாய்க் கிடப்பதும் பாங்கல்ல என்று அறுதியிட்டார். பின்னை எந்தப்பிறவியைப் ப்ரார்த்திக்கலா மென்று யோசித்தார்; இங் கிகழ்ந்தமர்திரி ஒவ்வொரு பிறப்பிலும் ஒவ்வொரு அநுபபத்தி தோன்றிக்கொண்டேயிருந்தது. கடைசியாக ஒரு பிறவியையும் தாமாக வேண்டிக்கொள்ள விரும்பாதவராய் "எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனு மாவேனே" என்கிறார். (௰)

687 மன்னியதண்சாரல் வடவேங்கடத்தான்தன் *
பொன்னியலுஞ்சேவடிகள் காண்பான்புரிந்திறைஞ்சி *
கொன்னவிலுங்கூர்வேல் குலசேகரன்சொன்ன *
பன்னியநூல்தமிழ்வல்லார் பாங்காயபத்தர்களே. (கக)

| | | | |
|---|---|---|---|
| கொல் நவிலும் | (பகைவர்களைக்) கொல்லுதலைப் பயின்ற | காண்பான் | ஸேவிப்பதற்கு |
| கூர் வேல் | கூர்மையான வேலாயுதத்தை யுடைய | புரிந்து | ஆசைப்பட்டு |
| குலசேகரன் | குலசேகராழ்வார் | இறைஞ்சி | வணங்கி |
| மன்னிய தண் சாரல் வடவேங் கடத்தான் தன் | நிலைபெற்ற குளிர்ச்சியுள்ள சாரல்களையுடைய வடவேங் கட மலையில் எழுந்தருளி யிருக்கிற பெருமானது | சொன்ன | அருளிச்செய்த |
| | | பன்னிய நூல் தமிழ் | ஆராய்ந்த நூல்களிற் கூறிய இலக்கணத்துக்கு இசைந்த தமிழ்ப்பாசுரத்தை |
| | | வல்லார் | கற்று வல்லவர் |
| பொன் இயலும் சே அடிகள் | பொன்போற் சிறந்த சிவந்த திருவடிகளை | பாங்கு ஆய பத் தர்கள் | (அப்பெருமான் திருவுள்ளத்துக்கு) இனிய பக்தர்களாவர். |

இத்திருமொழியை அடியொற்றி,

"மாடாக நிற்று சேழுமாணுகத் தவச்சிறிய
பூடாகக் குழைத்த கறும்புதலாக வழிப்படுமோ
றோடாகப் பெறுவமெனிலுயிர்காள்! கம்நதிபெறவாம்
வீடாகத் திருநெறிமால் வீற்றிருக்கும் வேங்கடத்தே." (கக)

என்று திருவேங்கடக் கலம்பகத்திற் கூறியது காண்க.

அடிவரவு:—ஊன் ஆனாத மீன் ஒண் கம்பம் மின் வான் பிறை செடி உம்பர் மன்னிய தரு.

---

ஸ்ரீமந்நாராயணனையன்றித் தமக்கு வேறு சரணமில்லாமையை அநேக த்ருஷ்டாந்த பூர்வகமாகத் திருவித்துவக் கோட்டம்மான் முன்னிலையில் விண்ணப்பஞ் செய்கிறார். *

688 தருதுயரம்தடாயேல் உன்சரணல்லால்சரணில்லை *
விரைகுழுவும்மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட்டம்மானே ! *
அரிசினத்தாலீன்றதாய் அகற்றிடினும் * மற்றவள்தன்
அருள்நினைந்தேயழுங்குழவி அதுவேபோன்றிருந்தேனே. (க)

| | | | |
|---|---|---|---|
| விரை குழுவும் | பரிமளம் விஞ்சிய | ஈன்ற தாய் | பெற்ற தாயானவள் |
| மலர் | புஷ்பங்களையுடைய | அரி சினத்தால் | மிக்க கோபங்கொண்டு அதனால் |
| பொழில் சூழ் | சோலைகளாலே சூழப்பட்ட | அகற்றிடினும் | (தனது குழந்தையை) வெறுத்துத் தள்ளினாலும் |
| வித்துவக்கோடு | திருவித்துவக்கோட்டில் எழுந்தருளியிருக்கிற | மற்று | பின்பும் |
| அம்மானே | ஸ்வாமியே! | அவள் தன் அருள் ஏ நினைந்து அழும் | அத்தாயினுடைய கருணையையே கருதி அழுகின்ற |
| தரு துயரம் | (நீயே எனக்குத்) தந்த இத் துன்பத்தை | குழவி அதுவே | இளங்குழந்தையையே |
| தடாய் ஏல் | நீயே களைந்திடா விட்டாலும் | போன்று இருந்தேன் | ஒத்திரா நின்றேன். |
| உன் சரண் அல்லால் சரண் இல்லை | உனது திருவடிகளே யன்றி (எனக்கு) வேறு புகலில்லை | | |

* * * வித்துவக்கோடு என்பதற்கு—வித்வான்கள் கூடிய இடம் என்று காரணப் பொருள் கூறுவர். பிள்ளைப்பெருமாளையங்கார் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் "இரு விற்றுவக்கோடு சேர்ந்தார் பிறவி கருவிற்றுவக் கோடுங்காண்" என்றிருப்பதனால். வித்துவக் கோடு அல்ல; விற்றுவக்கோடு என்பர் சிலர்: அவ்விடத்திலும் "திருவித்துவக்கோடு" என்றே பாடமென்பர் பெரியோர்: இவ்வளவால் எதுகையின்பம் குன்றாது இத்திருமொழியின் சாற்றுப்பாசுரத்திலும் இவ்வாறே பாடமாம். இத்திவ்யதேசம் மலைநாட்டில் "திருமிற்றக் கோடு" எனவும் வழங்கப் படுகின்றது. (க)

689 கண்டாரிகழ்வனவே காதலன்றான்செய்திடினும் *
கொண்டானையல்லால் அறியாக்குலமகள்போல் *
விண்டோய்மதிள்புடைசூழ் வித்துவக்கோட்டம்மா! * நீ
கொண்டாளாயாகிலும் உன்குரைகழலே கூறுவனே. (உ)

| | | | |
|---|---|---|---|
| விண் தோய் மதிள் | ஆகாயத்தை அளாவிய மதிள்கள் | கொண்டானை அல்லால் அறியா | (தன்னை) மணஞ்செய்து கொண்டவனான அக்கணவனையே யன்றி வேறொரு புருஷனை நினைப்பதுஞ் செய்யாத |
| புடை சூழ் | எப்புறத்தும் சூழப்பெற்ற | குலம் மகள் போல் | உயர்ந்தகுலத்துப் பிறந்த கற்புடைய மகள்போல் |
| வித்துவக்கோடு அம்மா | திருவித்துவக்கோட்டில் எழுந்தருளியிருக்கிற ஸ்வாமின்! | நீ கொண்டு ஆளாய் ஆகிலும் | என்னை அடிமைகொண்டவனான நீ குறையும் தவிர்க்காமல் உபேக்ஷித்தாயாகிலும் |
| காதலன் தான் | கணவனானவன் | உன் குரை கழலே கூறுவன் | ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய உனது திருவடிகளையே சரணமாகக்குறிக்கொள்வேன். |
| கண்டார் இகழ்வனவே செய்திடினும் | பார்ப்பவர்களெல்லாரும் இகழத்தக்க செயல்களையே செய்தாலும் | | |

693 செந்தழலேவந்து அழலைச்செய்திடினும் * செங்கமலம்
அந்தரம்சேர் வெங்கதிரோற்கல்லால்அலராவால் *
வெந்துயர்வீட்டாவிடினும் வித்துவக்கோட்டம்மா! * உன்
அந்தமில்சீர்க்கல்லால் அகம்குழையமாட்டேனே.

| | | | |
|---|---|---|---|
| வித்துவக்கோடு அம்மா!—; | | அலரா | (நெருப்புக்கு) மலரமாட்டா; |
| செம் தழலே வந்து | செந்நிறமுடைய நெருப்பு (தானாக) அருகில்வந்து | வெம் துயர் | (அநுபவித்தே தீரவேண்டிய) வைவான கொடிய (என்) பாவங்களை |
| அழலை செய்திடினும் | வெப்பத்தைச் செய்தாலும் | வீட்டா விடினும் | தீர்த்தருளா தொழிந்தாலும் |
| செம் கமலம் | செந்தாமரைகள் | உன் அந்தம் இல் சீர்க்கு அல்லால் | உனது எல்லையில்லாத உத்தம குணங்களுக்கே யல்லாமல் |
| அந்தரம் சேர் வெம் கதிரோற்கு அல்லால் | வானத்தில் தோன்றுகிற வெய்ய கிரணங்களையுடைய சூரியனுக்கு மலருமே யல்லது. | அகம் குழைய மாட்டேன் | (வேறொன்றுக்கு நான்) நெஞ்சு குழைமாட்டேன். |

694 எத்தனையும்வான்மறந்தகாலத்தும் பைங்கூழ்கள் *
மைத்தெழுந்தமாமுகிலே பார்த்திருக்கும்மற்றவைபோல் *
மெய்த்துயர்வீட்டாவிடினும் வித்துவக்கோட்டம்மா! * என்
சித்தமிகவுன்பாலே வைப்பனடியேனே. (எ)

| | | | |
|---|---|---|---|
| வித்துவக்கோடு அம்மா!—; | | அவை போல் | அப்பயிர்கள் போல, |
| வான் | மேகமானது | மெய் துயர் வீட்டா விடினும் | தவறாது அநுபவிக்கப்படுகிற என் துன்பங்களை நீ போக்காமல் உபேக்ஷித்தாலும் |
| எத்தனையும் மறந்த காலத்தும் | எவ்வளவுகாலம் மழை பெய்யாமல் உபேக்ஷித்தாலும் | | |
| பைம் கூழ்கள் | பசுமை தங்கிய பயிர்கள் | அடியேன் | உனக்கு தாஸனான நான் |
| மைத்து எழுந்த மா முகிலே பார்த்து இருக்கும் | கறுத்துக்கொண்டு கிளம்புகின்ற பெரிய மேகங்களையே எதிர்பார்த்திருக்கும்; | என் சித்தம் உன் பாலே மிக வைப்பன் | என் மனத்தை உன்னிடத்திலேயே மிகவும் செலுத்துவேன். |

695 தொக்கிலங்கியாறெல்லாம் பரந்தோடித்தொடுகடலே *
புக்கன்றிப்புறம்நிற்க மாட்டாதமற்றவைபோல் *
மிக்கிலங்குமுகில்நிறத்தாய் வித்துவக்கோட்டம்மா! * உன்
புக்கிலங்குசீரல்லால் புக்கிலன்காண்புண்ணியனே! (அ)

| | | | |
|---|---|---|---|
| மிக்கு இலங்கு | மிகவும் விளங்குகிற | தொடு கடலே புக்கு அன்றி புறம் நிற்க மாட்டாத | ஆழ்ந்த கடலிலே சென்று சேர்ந்தல்லது மற்றோரிடத்தே புகுந்து நிற்கமாட்டா; |
| முகில் | காளமேகம்போன்ற | | |
| நிறத்தாய் | கரியதிருநிறமுடையவனே! | | |
| வித்துவக்கோடு அம்மா!—; | | அவை போல் | அவ்வாறுகள் போல, |
| புண்ணியனே | புண்ய ஸ்வரூபியாயுள்ளவனே! | புக்கு இலங்கு | (என் நெஞ்சிலுள்ளே) புகுந்து விளங்குகிற |
| தொக்கு இலங்கு யாறு எல்லாம் | (ஜலப்ரவாஹம்) திரண்டு விளங்குகிற நதிகளெல்லாம் | சீர் அல்லால் | (உனது) கல்யாணகுணங்கள் தவிர (மற்றோரிடத்தில்) |
| பரந்து ஓடி | (கண்டவிடமெங்கும்) பரவியோடி (முடிவில்) | புக்கிலன் | ஆழ்ந்திடேன். |

696 நின்னையேதான்வேண்டி நீள்செல்வம்வேண்டாதான்
தன்னையே * தான்வேண்டும் செல்வம்போல், மாயத்தால் *
மின்னையேசேர்திகிரி வித்துவக்கோட்டம்மா! *
நின்னையேதான்வேண்டி நிற்பனடியேனே. (கூ)

மின்னையே சேர் திகிரி — மிக்க ஒளியையேகொண்டுள்ள சக்கராயுதத்தையுடைய
வித்துவக்கோடு அம்மா !—;
நின்னையே வேண்டி—உன்னையே விரும்பி
நீள் செல்வம் வேண்டாதான் தன்னையே — மிக்க ஸம்பத்தை விரும்பாதவனையே
தான் வேண்டும் — தானாகவே வந்துசேர விரும்புகிற
செல்வம் போல் — அந்த ஐச்வரியம்போல,
மாயத்தால் — (உன்) மாயையினால்
(நீ என்னை உபேக்ஷித்தாயாகிலும்)
அடியேன் — உனது அடியவனான நான்
நின்னையே வேண்டி நிற்பன் — உன்னையே அடைய விரும்பி நிற்பேன்.

* * * யாவனொருவன் எம்பெருமானிடத்திலே அன்பைச் செலுத்தி அதனால் ஐச்வர்யத்தை உபேக்ஷிக்கிறானோ, அவன் உபேக்ஷிக்க உபேக்ஷிக்க அவனது நல்வினைப்பயனும் அச்செல்வம் அவனை விடாது விரும்பி வலியத் தொடர்ந்து சேர்தல் இயல்பு. (அபேக்ஷிப்பவனுக்குக் கிடையாதொழிதலும், அபேக்ஷியாதவனுக்கு வலியிலேகிடைத்தலும் பகவத் ஸங்கல்ப மஹிமையென்பது இங்கு அறியத்தக்கது.) அதுபோலவே, நீ உன் உடைமையாகிய என்னை உபேக்ஷிக்க உபேக்ஷிக்க நான் உன்னையே விடாது நிற்பேன் என்றவாறு. அடியார்களுக்கு நேரும் துன்பங்களைப்போக்கி எங்களைக் காப்பதற்காகவே கையுந் திருவாழியுமாக இங்கே வந்துள்ளாய் நீ என்பது மூன்றாமடியின் உட்கருத்து.

இப்பாட்டு விஷயத்தில் வேதாந்த தேசிகனுடைய கருத்து;—செல்வத்தை வெறுத்து எம்பெருமானையே வேண்டி நிற்பவனுக்கு அச்செல்வம் தானே வந்து சேர்தல் யயாஹ்ரா ந ரு ஹஸிஷ்யாமி தஸ்ய வித்தம் ஹராம்யஹம்" என்ற பகவத் வாக்யத்திற்குப் பொருந்தாதாதலால், இப்பாட்டில் அங்ஙனம் கூறியுள்ளதை, முன்பு நெடுங்காலம் ஐச்வர்யத்துக்காக உபாஸனை பண்ணி அதுபெறும்ல் அதனை வெறுத்து எம்பெருமான் பக்கல் அன்புபூண்ட ஒரு அதிகாரி விசேஷ விஷயமாகக் கொள்ளுதல் நலம் என்பதாம். செல்வம் என்பதற்கு 'மோக்ஷலக்ஷ்மி' என்றுரைப்பாரும் உளர். (௯)

697 வித்துவக்கோட்டம்மா நீவேண்டாயேயாயிடினும் *
மற்றாரும்பற்றிலேனென்று அவனைத்தாள்நயந்த *
கொற்றவேல்தானைக் குலசேகரன் சொன்ன *
நற்றமிழ்ப்பத்தும்வல்லார் நண்ணார்நரகமே. (௰)

வித்துவக்கோடு அம்மா!—;
நீ வேண்டாயே ஆயிடினும் — நீ (என்னை) உபேக்ஷித்தாயாகிலும்
மற்று ஆரும் பற்றிலேன் என்று — வேறு எவரையும் நான் சரணமடைய மாட்டேன்' என்று (அத்யவஸாயத்தை வெளியிட்டு)
அவனை தாள் நயந்த — அவ்வெம்பெருமானது திருவடிகளிலேயே ஆசைகொண்டு
கொற்றம் வேல் தானை குலசேகரன் சொன்ன — வெற்றியைத்தரும் வேலாயுதத்தையும் சேனையையுமுடையவரான குலசேகரர் அருளிச்செய்த
நல் தமிழ் பத்தும் — நல்ல தமிழ்ப்பாடல்கள் பத்தையும்
வல்லார் — ஓதவல்லவர்கள்
நரகம் நண்ணார் — (கொடிய பாவங்கள் செய்திருந்தாலும்) நரகத்திற் சேரமாட்டார்கள்.

அடிவரவு:—தரு கண்டார் மீனோக்கு வாளால் வெங்கட்டிண் செந்தழல் எத்தனை தொக்கு நின்னை வித்துவ.

---

க. தருதுயரம். தாயினுடைய ஸ்தானத்தில் எம்பெருமானையும், குழந்தையினுடைய ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக் கூறியதனால் பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்குமுள்ள ஸம்பந்தம் தாய்க்கும் குழந்தைக்குமுள்ள உறவுமுறை போன்றதென விளங்கும்; அதாவது பிராணிவர்க்கங்களையெல்லாம் படைத்துக் காப்பவன் எம்பெருமானே என்பது.

உ. கண்டாரிகழ்வன. கணவன் ஸ்தானத்தில் எம்பெருமானையும் பத்நி ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக் கூறியதனால், பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கு முள்ள ஸம்பந்தம் கணவனுக்கும் மனைவிக்கு முள்ள தொடர்பு போன்றதெனத் தோன்றும்: அதாவது பரமாத்மாவினது தலைமையும் ஜீவாத்மாவினது அடிமையும், ஜீவாத்மா பரமாத்மாவுக்காக உரியதாயிருக்கையும், ஜீவாத்மா பரமாத்மாவின் ஸம்ச்லேஷத்தால் இன்பத்தையும் விச்லேஷத்தால் துன்பத்தையும் அடைதலும், பரமாத்மாவையே ஜீவாத்மா கரணங்களெல்லாவற்றாலும் அநுபவித்து ஆசக்தித்தலும் முதலியன.

ங. மீனோக்கு நீள்வயல். எம்பெருமானை அரசன் ஸ்தானத்திலும் தம்மைக் குடிகள் ஸ்தானத்திலும் வைத்துக் கூறியதனால், பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கு முள்ள ஸம்பந்தம் அரசனுக்கும் ப்ரஜைகளுக்கு முள்ள ஸம்பந்தம் போன்றதென விளங்கும். அதாவது—ரக்ஷ்ய ரக்ஷகபாவம்: அவன் காப்பவனாகவும் இவன் காக்கப்படுமவனாகவு மிருத்தல்.

ச. வாளாலறுத்து. வைத்தியன் ஸ்தானத்தில் எம்பெருமானையும் நோயாளியின் ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக் கூறியதனால், பரமாத்மா ஜீவாத்மாவுக்கு ஹிதஞ்செய்பவனேயே யன்றியவனாதலும், ஜீவாத்மா பரமாத்மாவினிடத்து நம்பிக்கை கொள்ளவேண்டியவனாதலும் தெளிவாம்.

ரு. வெங்கண் திண்களிறு. மரக்கலத்தின் ஸ்தானத்தில் எம்பெருமானையும் பறவையின் ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக் கூறியதனால், ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவையன்றி அமையாதென்பதும் பரமாத்மா ஜீவாத்மாவுக்கு ஆதாரமாதலும் வெளியாம்.

சு. செந்தழலேவந்து. ஸூர்யன் ஸ்தானத்தில் எம்பெருமானையும் தாமரையின் ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக் கூறியதனால், பரமாத்மா இன்பந்தருபவ னென்பதும் ஜீவாத்மா இன்ப மநுபவிப்பவ னென்பதும் விளங்கும். இதில், இரண்டாவது பாசுரத்திற் காட்டியது போன்ற நாயக நாயகீ பாவம் தொனிக்கும்.

எ. எத்தனையும்வான். காளமேகத்தின் ஸ்தானத்தில் எம்பெருமானையும் பயிரின் ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக் கூறியதனால், உலகத்து உயிர்கட்கெல்லாம் ஜீவநாதாரம் பரமாத்மாவே என்று அறியலாம்.

அ. தொக்கிலங்கியாறு. கடலின் ஸ்தானத்தில் எம்பெருமானையும் நதியின் ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக் கூறியதனால், பரமாத்மாவினது பெருமையும் ஜீவாத்மாவினது சிறுமையும், முடிவில் ஜீவாத்மா பரமாத்மாவை அடைதலும் புலனும். இதிலும் நாயக நாயகீ பாவம் தொனிக்கும்.

கூ. நின்னையேதான் வேண்டி. செல்வத்துக்கு உரியவனுடைய ஸ்தானத்தில் எம்பெருமானையும் செல்வத்தின் ஸ்தானத்தில் தம்மையும் வைத்துக் கூறியதனால், 'ஜீவாத்மா பரமாத்மாவின் உடைமை' என்பது புலப்படும். [ஸ்வஸ்வாமிபாவ ஸம்பந்தம்.]

ய. வித்துவக்கோட்டம்மா. இங்ஙனம் ஆழ்வார் தமது குறையை எம்பெருமான் பக்கலிலே ஒருமுறைக்கு ஒன்பதுமுறை விண்ணப்பஞ் செய்ததனால் அவனுக்கு ஆழ்வாரிடம் உண்டான கருணையின் பெருக்கு அவ்வாழ்வாரது அருளிச்செயல்களில் ஆழ்பவரையுஞ் செல்லு மென்பது இப்பாசுரத்தில் அமையும்.

ஐந்தாந்திருமொழி உரை முற்றிற்று.

# ஆறாந் திருமொழி—ஏர்மலர்ப்பூங்குழல்.

---

*ப்ரணய ரோஷங்கொண்ட கோபிகள் கண்ணபிரானை வெறுத்துரைத்த பாசுரம்.*

698 ஏர்மலர்ப்பூங்குழலாயர்மாதர் எனைப்பலருள்ளவிவ்வூரில் * உன்றன்
மார்வுதழுவுதற்காசையின்மை அறிந்தறிந்தேயுன்றன்பொய்யைக்கேட்டு *
கூர்மழைபோல்பனிக்கூதலெய்திக் கூசிநடுங்கியமுனையாற்றில் *
வார்மணற்குன்றில்புலரநின்றேன் வாசுதேவாவுன்வரவுபார்த்தே. (௧)

| | | | |
|---|---|---|---|
| வாசுதேவா | கண்ணபிரானே! | | (அவற்றை மெய்யென மயங்கி) |
| ஏர் மலர் பூ குழல் ஆயர் மாதர் | அழகிய புஷ்பங்களை அணிந்த பரிமளம் மிக்க கூந்தலையுடைய இடைப்பெண்கள் | கூர் மழை போல் பனிக்கூதல் எய்தி | மிக்க மழைபோல் பெய்கிற பனியாலுண்டான குளிரிலே அகப்பட்டு |
| எனை பலர் உள்ள | எத்தனையோ பேர்களிருக்கப் பெற்ற | கூசி | (யார் பார்த்து விடுவார்களோ வென்று) கூச்சமடைந்து |
| இ ஊரில் | இந்தத் திருவாய்ப்பாடியில் | நடுங்கி | நடுங்கிக்கொண்டு |
| உன்தன் மார்வு தழுவுதற்கு | உன்னுடைய மார்போடு அணைவதற்கு | யமுனை ஆற்றில் | யமுனாநதியில் |
| ஆசை இன்மை அறிந்து அறிந்தே | ஆசை யில்லாமையை நன்றாக அறிந்து வைத்தும் | வார் மணல் குன்றில் | பெரியதொரு மணற் குன்றிலே |
| உன்தன் | உன்னுடைய | உன் வரவு பார்த்து | உன் வரவை எதிர்பார்த்துக் கொண்டு |
| பொய்யை கேட்டு | பொய்யான வார்த்தைகளைக் கேட்டு | புலர நின்றேன் | பொழுது விடியுமளவும் (அங்கேயே) காத்து நின்றேன். |

* * * கண்ணபிரான் ஒரு பெண்பிள்ளையை நோக்கி 'நீ யமுனையாற்றின் மணற்குன்றிலே போய் நில்லு, நான் அங்கே வருகிறேன்' என்று சொல்லிவிட, அப்படியே அவள் அங்கேபோய் விடியுமளவும் நின்று அவன் வாராமையால் வருத்தத்தோடு மீண்டுவந்து, மற்றொரு நாள் அவனைக்கண்டபோது ப்ரணய ரோஷந்தோற்றச் சொல்லுகிற பாசுரமாயிருக்கிறது இப்பாட்டு. அபிப்ராயமாய் உன் பொய்யைக்கேட்டு மோசம்போனே னென்கிறாள். [வாசுதேவா!] ஒருவிதமும் பொய்சொல்லியறியாத வஸுதேவர் வயிற்றில் பிறந்த நீயும் தந்தையைப் போலிருப்பாயென்று நம்பிக் கேட்டேன்காண்! என்ற குறிப்பு. புலர்தல்—பொழுது விடிதல். ()

699 கெண்டையொண்கண்மடவாளொருத்தி கீழையகத்துத்தயிர்கடையக்
கண்டு * ஒல்லைநானுங்கடைவனென்று கள்ளவிழியைவிழித்துப்புக்கு *
வண்டமர்பூங்குழல்தாழ்ந்துலாவ வாண்முகம்வேர்ப்பச்செவ்வாய்துடிப்ப *
தண்டயிர்நீகடைந்திட்டவண்ணம் தாமோதரா! மெய்யறிவன்நானே. (௨)

| | | | |
|---|---|---|---|
| தாமோதரா | கண்ணபிரானே! | நானும் | *நானும் (உன்னோடுகூட) |
| கீழை அகத்து | (என் வீட்டுக்குக்) கீழண்டை வீட்டில் | ஒல்லை கடைவன் என்று | சீக்கிரமாக (இத்தயிரைக்) கடைகிறேன்' என்று (வாயாற் சொல்லி) |
| கெண்டை ஒண் கண் மடவாள் ஒருத்தி | கயல் போன்று அழகிய கண்களையுடையவளான ஒரு பெண்ணானவள் | கள்ளம் விழியை விழித்து | திருட்டுப்பார்வை பார்த்து |
| தயிர் கடைய கண்டு | (தனியே) தயிர்கடையா நிற்பதைக்கண்டு (இவளை வசப்படுத்துதற்கு இது ஸமயமென்று நிச்சயித்துக்கொண்டு) | புக்கு | (அவளருகே) சென்று சேர்ந்து |
| | | வண்டு அமர் பூ குழல் | வண்டுகள் படிந்த புஷ்பங்களை அணிந்த மயிர் முடியானது |

| | | | |
|---|---|---|---|
| தாழ்ந்து உலாய | அவிழ்ந்து அசையும்படியாகவும் | தண் தயிர் | குளிர்ந்த தயிரை |
| வாள் முகம் வேர்ப்ப | ஒளிபொருந்திய முகமானது வேர்க்கும்படியாகவும் | நீ கடைந்திட்ட வண்ணம் | நீ கடைந்தபடியை |
| செம் வாய் துடிப்ப | சிவந்த அதரமானது துடிக்கும்படியாகவும் | நான் மெய் அறிவன் | நான் மெய்யே அறிவேன். |

*** வேறொரு ஆய்ச்சியின் வார்த்தை இது. என் அகத்திற்குக் கிழக்கடை அகத்திலிருப்பாளொரு பெண்பிள்ளையானவள் தனியே யிருந்து தயிர் கடையா நிற்கையில் அது கண்ட நீ "ஸமயலாபம் பெற்றோம்" என உகந்து அவளருகில் ஓடிச்சென்று புகுந்து "அம்மா! நீ தனியாகத் தயிர்கடைந்தால் ஒருகாலும் வெண்ணெய் புறப்படமாட்டாது; நானும் ஒருதலைபற்றிக் கடைந்தால் தான் விரைவில் வெண்ணெய் காணும்" என்று வாயாரச் சொல்லி, உள்ளே வேறு நினைவு இருக்கும்படி தோன்றத் திருட்டுவிழி விழித்து, மயிர்முடி அவிழ்ந்து அலையும்படியாகவும், தாமரையிலே முத்துப் படிந்தாற்போலே ஒளிபொருந்திய முகம் வேர்க்கும்படியாகவும், அதரம் துடிக்கும்படியாகவும் அவளோடேகூடி நீ தயிர்கடைந்த வரலாறு எனக்குத் தெரியுமப்பா! என்கிறாள். 'இன்னமும் அங்கேயே தயிர்கடையப்போ; இங்கே உனக்கென்னபணி?' என்ற ஊடல் உள்ளுறை. (உ)

700 கருமலர்க்கூந்தலொருத்திதன்னைக் கடைகணித்தாங்கேயொருத்திதன்பால் *
மருவிமனம்வைத்துமற்றொருத்திக்குரைத்து ஒருபேதைக்குப்பொய்குறித்து *
புரிகுழல்மங்கையொருத்திதன்னைப்புணர்தி அவளுக்கும்மெய்யனல்லை *
மருதிறுத்தாயுன்வளர்த்தியோடே வளர்கின்றதாலுன்றன்மாயைதானே. (ங)

| | | | |
|---|---|---|---|
| மலர் கரு கூந்தல் | புஷ்பங்களை அணிந்துள்ள கறுத்த மயிர்முடியையுடையளான | புரி குழல் மங்கை ஒருத்தி தன்னை | கடை குழன்று சுருண்ட கூந்தலையுடையவளான ஒரு இளம் பெண்ணோடு |
| ஒருத்தி தன்னை | ஒரு பெண்பிள்ளையை | புணர்தி | கலவி செய்யாநின்றாய்; |
| கடைக் கணித்து | கடைக்கண்ணால் பார்த்து விட்டு | அவளுக்கும் | அந்தப் பெண்ணுக்கும் |
| ஆங்கே | அப்படியிருக்கச் செய்தே, | மெய்யன் அல்லை | பொய்யனாயிராநின்றாய்; |
| ஒருத்திதன் பால் மனம் மருவி வைத்து | வேறொரு பெண்பிள்ளையிடத்தில் மனதைப் பொருந்தச் செய்து. (அவளையும் விட்டு) | மருது இறுத்தாய் | இரட்டை மருதமரங்களை முறித்தருளினவனே! |
| மற்று ஒருத்திக்கு உரைத்து | வேறொரு பெண்ணிடத்தில் ('உனக்குநான் அடியேன்') என்று சொல்லிவைத்து, | உன் வளர்த்தியோடே | நீ வளர்வதோடு கூடவே |
| ஒரு பேதைக்கு | வேறொரு பெண்ணுக்கு | உன்தன் மாயை | உன்னுடைய கள்ளங் கவடுகளும் |
| பொய் குறித்து | (ஸம்ச்லேஷத்துக்காகப்) பொய்யாகவே (ஒரு ஏகாந்தஸ்தலத்தைக்) குறிப்பிட்டுவைத்து. ஆக இத்தனை பேரையும் ஏமாத்தி விட்டு) | வளர்கின்றது ஆல் | வளர்ந்து வாராநின்றன; அந்தோ!. |

*** இங்கே "மருதிறுத்தாய்!" என விளித்ததனால், நீ பருவம் நிரம்புவதற்கு முன்னமே இருவரைக் கொன்றவனாதலால் உன்னைத் தீண்ட நான் அஞ்சாநின்றேன் காண் என்று குறிப்பிட்டவாறுமென்ப. (ங)

701 தாய்முலைப்பாலிலமுதிருக்கத் தவழ்ந்து தளர்நடையிட்டுச்சென்று *
பேய்முலைவாய்வைத்துநஞ்சையுண்டு பித்தனென்றே பிறரேசநின்றாய் *
ஆய்மிகுகாதலோடியானிருப்ப யான்விடவந்த வென்தூதியோடே *
நீமிகுபோகத்தைநன்குகந்தாய் அதுவுமுன்கோரம்புக்கேற்குமன்றே. (ச)

| | | | |
|---|---|---|---|
| தாய் முலையில் | தாயான யசோதைப் பிராட்டியினுடைய முலைகளில் | பிறர் ஏச நின்றாய் | அயலாரெல்லாரும் பரிஹஸிக்கும்படி நின்ற பிரானே! |
| பால் அமுது இருக்க | போக்யமான பால் இருக்கச் செய்தேயும், (அதனை விரும்பாமல்) | யான் | நான் |
| தவழ்ந்து | தவழ்ந்துகொண்டு | ஆய் மிகு காதலோடு இருப்ப | மிகவும் அதிகமான ஆசையோடு எதிர்பார்த்திருக்கையில், |
| தளர் நடை இட்டு சென்று | தட்டுத்தடுமாறி நடந்து சென்று | நீ | நீ, |
| பேய் முலை வாய் வைத்து | பூதனையினுடைய முலையிலே வாயை வைத்து | யான் விட வந்த என் தூதியோடே | என்னால் அனுப்பப்பட்டு (உன்னிடம்) வந்த என் வேலைக்காரியோடே |
| நஞ்சை உண்டு | (அம்முலையிலே தடவிக்கிடந்த) விஷத்தை உறிஞ்சி அமுதுசெய்து | மிகு போகத்தை | நல்ல போக ரஸங்களை |
| | | நன்கு உகந்தாய் | நன்றாக அநுபவித்தாய்; |
| | | அதுவும் | அந்தச் செய்கையும் |
| பித்தன் என்று | (இப்படி செய்தது காரணமாக) 'பைத்தியக்காரன்' என்று | உன் கோரம்புக்கு | உனது தீம்புக்கு |
| | | ஏற்கும் அன்றே | தகுந்திருக்குமாயிற்று. |

702 மின்னொத்தநுண்ணிடையாளைக்கொண்டு வீங்கிருள்வாயென்றன்வீதியூடே *
பொன்னொத்தவாடைக்குக்கூடலிட்டுப் போகின்றபோதுநான்கண்டுநின்றேன் *
கண்ணுற்றவளைநீகண்ணாலிட்டுக் கைவிளிக்கின்றதும்கண்டேநின்றேன் *
என்னுக்கவளைவிட்டிங்குவந்தாய் இன்னமங்கேநடநம்பி! நீயே. (௫)

| | | | |
|---|---|---|---|
| மின் ஒத்த நுண் இடையாளை கொண்டு | மின்னல்போன்று ஸூக்ஷ்மமான இடையையுடைய ஒரு பெண்ணை அழைத்துக்கொண்டு | கண் உற்றவளை | கண்ணில் தென்பட்ட வேறொருத்தியை |
| | | கண்ணால் இட்டு | (உனக்கே அற்றுத் தீரும்படி) கடாக்ஷித்து |
| வீங்கு இருள் வாய் | நிபிடமான (மிக்க) இருள்வேளையிலே | கை விளிக்கின்றதும் | (இங்கு வா என்று) கையாலே அழைத்து ஸம்ஜ்ஞை பண்ணினதையும் |
| பொன் ஒத்த ஆடை | பீதாம்பரத்தாலே | | |
| குக்கூடல் இட்டு | முட்டாக்கிட்டுக்கொண்டு | கண்டே நின்றேன் | பார்த்துக்கொண்டிருந்தேன்; |
| என்தன் வீதி ஊடே | என் வீதிவழியே | அவளை விட்டு | அந்தப் பெண்ணையும் விட்டு |
| போகின்ற போது | (அவளும் நீயுமாகப்) போகும்போது | இங்கு | என்னிடத்திற்கு |
| நான் கண்டு நின்றேன் | நான் பார்த்துக்கொண்டிருந்தேன்; | என்னுக்கு வந்தாய் | எதற்காக வந்தாய்! |
| | (அன்றியும்;) | நம்பி | ஸ்வாமிந்! |
| | நீ— | இன்னம் அங்கே நட | இப்போதும் நீ அவர்களிடத்திற்கே நடப்பாயாக. |

* * * வேறொருத்தியின் பாசுரம் இது. கள்ளிருளில் ஒருவர்க்கும் தெரியாமல் போக வேணுமென்று போகிறவன் இருளன்ன மாமேனியைத் திறந்துகொண்டே போகலாம்; அல்லது கறுத்ததோர் ஆடையைப் போர்த்துக்கொண்டு போகலாம். நீயோ இருளை அகற்றிப் பளபளவென்று ப்ரகாசிக்கும்படியான பீதாம்பரத்தை முட்டாக்கிட்டுக் கொண்டுபோனாய்; போவதுதானும் வேறுவழியாயோ? நான் கண்டு வயிறெரியவேணுமென்றே என் தெருவழியே போனாய், என்ற கருத்துக்களை விரித்துக்கொள்க. குக்கூடல்—முட்டாக்கு. (௫)

703 மற்பொருதோளுடைவாசுதேவா வல்வினையேன்துயில்கொண்டவாறே *
இற்றையிரவிடையேமத்தென்னை இன்னணைமேலிட்டகன்றுநீபோய் *
அற்றையிரவுமோர்பிற்றைநாளும் அரிவையரோடுமணைந்துவந்தாய் *
எற்றுக்குநீயென்மருங்கில்வந்தாய் எம்பெருமான்! நீயெழுந்தருளே. (௬)

705 என்னைவருகவெனக்குறித்திட்டு இனமலர்முல்லையின்பந்தர்நீழல் *
மன்னியவளைப்புணரப்புக்கு மற்றென்னைக்கண்டுஉழறாநெகிழ்த்தாய் *
பொன்னிறவாடையைக்கையில்தாங்கிப் பொய்யச்சம்காட்டிநீபோதியேலும் *
இன்னமென்கையகத்தீங்கொருநாள் வருதியேலென்சினம்தீர்வன்நானே. (அ)

| | | | |
|---|---|---|---|
| என்னை | என்னை | கையில் தாங்கி | கையிலே தாங்கிக்கொண்டு |
| வருக என | (இன்னவிடத்திற்கு) வாவென்று | பொய் | பொய்யாக |
| குறித்திட்டு | ஸங்கேதம் பண்ணிவைத்து விட்டு. | அச்சம் காட்டி | நீ எனக்கு அஞ்சினதாக நான் பாவிக்கும்படி செய்துகொண்டு |
| இனம் மலர் முல்லையின் பந்தர் நீழல் | நிறைந்த மலர்களையுடைய முல்லைப்பந்தலின் நிழலிலே | நீ போதி ஏலும் | நீ (என்கைக்கு அகப்படாமல்) ஓடிப்போன போதிலும் |
| மன்னி அவளை | (வெகுகாலமாய்ப்) பதுங்கி நின்ற ஒருத்தியை | இன்னம் | இனி |
| | | ஈங்கு | இங்கே |
| புணர புக்கு | ஸம்ச்லேஷிக்கப்போய் | என் கை அகத்து | என்னிடத்திற்கு |
| மற்று என்னை கண்டு | பிறகு என்னைப்பார்த்து | ஒரு நாள் வருதி ஏல் | ஒருநாளாகிலும் வருவாயாகில் |
| உழறு | கலங்கி | | |
| நெகிழ்த்தாய் | அப்பாலே நழுவினாய்; | | (அப்போது) |
| பொன் நிறம் ஆடையை | பீதாம்பரத்தை | நான் என் சினம் தீர்வன் | நான் என்கோபத்தைத்தீர்த்துக் கொள்வேன். |

*** [என்சினம் தீர்வன்நானே] என்கிறவிடத்தைக் கோயிலில் திருவத்யயநோத்ஸவத்தில் 'உய்ந்த பிள்ளை' என்பாரொரு அரையர் அபிநயிக்கும்போது, கையாலே அடிப்பதும் காலாலே துவைப்பதுமாய் அபிநயித்தார்; அதாவது—மறுபடியும் நீ என்கையில் அகப்படும்போது உன்னை நான் கையாலடித்தும் காலால் துவைத்தும் என் கோபத்தைத் தணித்துக் கொள்வேன் என்பதாகக் கருத்தைவிரித்தார். அப்போது கோஷ்டியிலெழுந்தருளியிருந்த எம்பார் இங்ஙனே அரையர் காட்டிய அபிநயத்தைக் கடாக்ஷித்து அரையர்க்கு ரஸிக்யம் போராதென்று திருவுள்ளம்பற்றி; 'கெடுவாய்! அப்படி அவன் செய்தானாகில் பக்ஷம்ருஷீஸோ நம ஹ்ருஷீகாதாய நம" என்றிருக்கிற கண்ணனுக்கு அது வருத்தமோ? வேப்பிலையுருண்டையோ? இது அவனுக்கு ஸமஸ்ரூஷையாமன்றோ ஆகையால் அதுவன்று கருத்து; முகங்கொடுக்காமல் முகத்தை மாறவைத்து என் கோபத்தைத் தணித்துக்கொள்வேன் என்னுங் கருத்துத் தோன்ற, கைவிட்டு முகத்தை மறைத்துத் திரியவைத்தருளிக் காட்டவேணுமென்று தாம் அவ்வாறாக அபிநயித்துக்காட்டினார் என்று ப்ரஸித்தம். (அ)

706 மங்கலநல்வனமாலைமார்விலிலங்க மயில்தழைப்பீலிசூடி *
பொங்கிளவாடை அரையில்சாத்திப் பூங்கொத்துக்காதில்புணரப்பெய்து *
கொங்குநறுங்குழலார்களோடு குழைந்துகுழலினிதூதிவந்தாய் *
எங்களுக்கேயொருநாள்வந்தூத உன்குழலின்னிசைபோதராதே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| மங்கலம் | மங்களகரமாய் | அரையில் சாத்தி | அரையிலே சாத்திக்கொண்டும் |
| நல் | விலக்ஷணமான | பூ கொத்து | பூங்கொத்துக்களை |
| வனமாலை | வனமாலையானது | காதில் | காதிலே |
| மார்பில் | மார்பிலே | புணர பெய்து | மிகவும் பொருந்த அணிந்து கொண்டும் |
| இலங்க | ப்ரகாசிக்க, | கொங்கு நறு குழலார்களோடு | தேன்மணம் கமழ்கின்ற கூந்தலையுடைய பெண்களோடு |
| மயில் தழைப்பீலி | மயிலிறகுகளை | | |
| சூடி | சூடிக்கொண்டும் | குழைந்து | ஸம்ச்லேஷித்து (அந்நாளுண்டான ஸந்தோஷத்துக்குப் போக்குவீடாக) |
| பொங்கு இள ஆடை | பளபளவென்ற மெல்லிய ஆடையை | குழல் | புல்லாங்குழலை |

* * *—பன்னிரண்டு மாதம் உன்னை வயிற்றிற் சுமந்து பெற்ற நான் உடனே திருவாய்ப்பாடிக்குப் போக்கிவிட்டேனாதலால், உன்னைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டுதல் முதலிய ஆனந்தாநுபவங்களை யசோதை பெற்றாளே யன்றி நான் பெறாதொழிந்தேன், பாவியே னிழந்தேன், பிள்ளையைப் பெற்று ஆனந்தாநுபவம் பண்ணப்பெறாத அத்ருஷ்டபாவிகளான தாய்மாரில் அந்தோ! நான் கடைகெட்ட தாயாகிவிட்டேனே! என்று தேவகி தன் வயிற்றெரிச்சலைக் கண்ணபிரானை நோக்கிக் கூறுகின்றனளென்க.

"ஆலைநீள் கரும்பன்னவன்" என்று தொடங்கி "எலவார் குழலென்மகன்" என்றளவு முன்ன ஐந்து விளிகளும் அண்மை விளி. குழந்தையைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டும்போது தாய்மார் முதலியோர் பாராட்டிச் சொல்லும் பாசுரம் இவை. ஆலையிலிட்டு ஆடத்தகுந்த கரும்பு என்றது—நன்றாக முற்றி ரஸம் நிரம்பிய கரும்பு என்றவாறு; அதுபோன்றவனே! என்றது—"ரஸோவைஸ:" என்று உபநிஷத்தில் ஓதியுள்ளபடி—இன்சுவையே உருவெடுத்து வந்தாற்போலுள்ளவனே! என்றபடி: தாலோ = தால்—நாக்கு; குழந்தைகளை உறங்கப் பண்ணுவதற்காகப் பெண்கள் நாவை அசைத்துச் சொல்லும் சொல்லு. (க)

709 வடிக்கோளஞ்சனமெழுதுசெம்மலர்க்கண் மருவிமேலினிதொன்றினைநோக்கி *
முடக்கிச்சேவடிமலர்ச்சிறுகருந்தாள் பொலியுநீர்முகிற்குழவியேபோல *
அடக்கியாரச்செஞ்சிறுவிரலனைத்தும் அங்கையோடணைந்தானையிற்கிடந்த *
கிடக்கைகண்டிடப்பெற்றிலேனந்தோ கேசவாகெடுவேன்கெடுவேனே. (உ)

| | |
|---|---|
| வடி கொள் | கூர்மையை யுடைத்தாய் |
| அஞ்சனம் எழுது | மையிடப் பெற்றதாய் |
| செம் மலர் | செந்தாமரை மலரை ஒத்ததான |
| கண் | கண்களாலே |
| மேல் ஒன்றினை | மேற்கட்டியிலே தொங்கவிட்டிருக்கும் கிளி முதலியவற்றில் ஒரு வஸ்துவை |
| இனிது | இனிதாக |
| மருவி நோக்கி | பொருந்தப் பார்த்துக்கொண்டும்; |
| கரு தாள் | கறுத்தபுறந்தாளை யுடையதும் |
| மலர் | செந்தாமரை மலரையொத்து |
| சிறு | சிறுத்த |
| சே அடி | சிவந்த அகவாயை உடையதுமான திருவடிகளை |
| முடக்கி | முடக்கிக்கொண்டும் |

| | |
|---|---|
| நீர் பொலியும் | (கழுத்தளவும் பருகின) நீர் விளங்கப்பெற்ற |
| முகில் குழவிபோல | மேகக்குட்டி போல. |
| செம் சிறு விரல் அனைத்தும் | அழகிய சிறுத்த திருவிரல்களெல்லாவற்றையும் |
| அம் கையோடு | உள்ளங்கையிலே |
| அடக்கி ஆர | அடக்கும்படி |
| அணைந்து | முடக்கிப் பிடித்துக்கொண்டும் |
| ஆனையின் கிடந்த கிடக்கை | ஆனை கிடக்குமாபோலே பள்ளி கொண்டருளுமழகை |
| கண்டிட பெற்றிலேன் | கண்டு அநுபவிக்கப் பெறாத பாவியானேன்; |
| அந்தோ | ஐயோ! |
| கேசவா | கண்ணபிரானே! |
| கெடுவேன் கெடுவேன் | ஒன்றும் அநுபவிக்கப்பெறாத பெரும்பாவியானேன். |

* * * தாயாயிருந்து தாலாட்டும் பாக்கியத்தை மாத்திரமேயோ நானிழந்தது? நீ தொட்டிலிற் சாய்ந்திருக்குமழகை ஊர்ப்பெண்களெல்லாரும் திரண்டு வந்து கண்டு களித்துப் போவார்களே; அவர்களில் ஒருத்தியா யிருந்தாகிலும் நான் அவ்வழகைக் காணப்பெற்றேனோ? அக்கேடுமில்லையே! ஐயோ! என்கிறாள். குழந்தைகள் தொட்டிலில் கிடக்கும்போது இருக்கக்கூடிய இயல்வைச் சொல்வன மூவடிகளும். குழந்தைகள் தொட்டிலில் அண்ணாந்து பார்த்துக்கொண்டு கிடக்குமாதலால் வேறு நினைவின்றி மேலே உற்றுநோக்குதற்காகத் தொட்டிலின்மீது கிளிச்சட்டம் தொங்கவிட்டு வைப்பர்கள்; அதில் மிக அழகான ஒரு வஸ்துவை உற்றுநோக்கிக்கொண்டு களித்திருத்தல் குழந்தைகளின் இயல்பு; அதனைக்கூறுவது முதலடி. தொட்டிலில் கிடக்கும் விதம் சொல்லுகிறது மேல். மேல்புறம் கறுத்து உட்புறம்

| | | | |
|---|---|---|---|
| மார்வும் | திருமார்பும் | இன்று | இப்போது |
| நின் தோளும் | வலிமைபொருந்திய திருத்தோள்களும் | என்தன் கண்ணால்- | என்னுடைய கண்ணாலே |
| தளிர் மலர் கரு குழல் | தளிரையும் மலரையு முடைத் தாய்க் கறுத்த திருக்குழற் கற்றையும் | பருகுவேற்கு | (நான்) அநுபவியாநின்றாலும் |
| பிறை அதுவும் | அஷ்டமீ சந்திரன் போன்ற திருநெற்றியும், | இவள் தாய் என நினைந்த | (இவள் என்னுடைய) தாய் என்று நினைப்பதற்குத் தகுதியான |
| தடம் கொள் | விசாலமான | மென் தோமை | சைசவப்பருவத்திலுண்டான |
| தாமரை கண்களும் | தாமரைபோன்ற திருக்கண்களும் (ஆகிய இவை) | அளவு இல் இன்பத்தை | அளவில்லாத ஆநந்தத்தை |
| பொலிந்த இளமை இன்பத்தை | அழகுபெற்று விளங்கும் படியான யௌவநாவஸ்தை யின் போக்யதையை | இழந்த | அநுபவிக்கப்பெறாமல் இழந்த |
| | | பாவியேன் எனது | பாவியான என்னுடைய |
| | | ஆவி | உயிரானது |
| | | நில்லாது | தரித்து நிற்க வழியில்லையே. |

* * * கண்ணபிரானே! செறிந்த நிலாவையுடைய பூர்ண சந்திரன் போன்ற திருமுகமும் இன்னிதான திருக்கையும் திருமார்வும் திருத்தோளும் திருக்குழலும் திருநெற்றியும் திருக்கண்களுமாகிய இவ்வவயவங்களின் சோபைகளால் விளங்கா நின்றுள்ள உனது யௌவந பருவத்திலழகை இப்போது நான் கண்ணாரக் கண்டநுபவியா நின்றேனாகிலும், தாயாரொருத்தியையேயன்றி வேறொருத்தரையு மறியாத இளம்பருவத்தை அநுபவிக்கப் பெறாமற்போனேனே! என்கிற அநுதாபமே என் நெஞ்சைக் கொள்ளை கொண்டிருப்பதனால் இப்போது அநுபவிக்கப் பெற்றது ஒரு பொருளாகத் தோன்றாமல் கழிவிரக்கமே என்னைப் புண்படுத்தா நின்றதென்கிறாள். (௧)

712 மருவுநின்திருநெற்றியிற்சுட்டியசைதர மணிவாயிடைமுத்தம்
தருதலும் * உன்றன்தாதையைப்போலும்வடிவுகண்டுகொண்ட உள்ளமுள்குளிர *
விரலைச்செஞ்சிறுவாயிடைச்சேர்த்து வெகுளியாய்நின்றுரைக்குமவ்வுரையும் *
திருவிலேனொன்றும்பெற்றிலேன் எல்லாந்தெய்வநங்கையசோதைபெற்றாளே. (௨)

| | | | |
|---|---|---|---|
| நின் திரு நெற்றியில் மருவும் சுட்டி அசைதர | உன்னுடைய திருநெற்றியிலே பொருந்தியிருக்கிற சுட்டியானது அசையும்படி. | விரலை சேர்த்து வெகுளியாய் நின்று உரைக்கும் அ உரையும் | விரல்களை வைத்துக்கொண்டு (நீ) சீற்றத்தோடே சொல்லுகிற மழலைச் சொற்களென்ன (ஆகிய இவற்றிலே) |
| மணி வாயிடை முத்தம் தருதலும் | அழகிய வாயிலுண்டான முத்தத்தைக் கொடுப்பதென்ன | ஒன்றும் | ஒன்றையும் |
| உன்தன் தாதையை போலும் | உன்னுடைய தகப்பனாரைப் போன்ற | திரு இலேன் | பாக்யமற்றவளான நான் |
| வடிவு | (உன்) வடிவழகை | பெற்றிலேன் | அநுபவிக்கப் பெறவில்லை; |
| கண்டுகொண்டு | (நான்) பார்த்து | தெய்வ நங்கை யசோதை | 'தெய்வமாது' என்று சொல்லலாம்படியான யசோதைப் பிராட்டி |
| உள்ளம் உள் குளிர | (என்) மனஸ்ஸானது உள்ளே குளிரும்படி | எல்லாம் பெற்றாளே | (அந்த பாக்யசேஷ்டிதங்கள்) எல்லாவற்றையும் அநுபவிக்கப் பெற்றாளே. |
| செம் சிறு வாயிடை- | சிவந்த சிறிய திருவாயிலே | | |

* * * திருநெற்றியிலே கூடப்பிறந்தாற்போல அமைந்து விளங்கும் சுட்டியானது அசையும்படி நீ முத்தங்கொடுப்பதையும் இழந்தேன்; "நம் குழந்தையின் முகம் தகப்பனாருடைய முகம்போலவே யிருக்கிறது!" என்று சொல்லிக்கொண்டு உனது முகத்தைச் சந்தோஷமாகப் பார்த்து நிற்கும்போது, நீ விரல்களை வாயினுள்ளே வைத்துக்கொண்டு பால்யோசிதமாகச் சீற்றம் தோற்றச்சொல்லும் மழலைச் சொற்களையும் நான் கேட்கப்பெறாமல் இழந்தேன்; இழப்பதற்கு நானொருத்தி ஏற்பட்டாற்போலே அநுபவிப்பதற்கு யசோதைப் பிராட்டியென்பாளொருத்தி ஏற்பட்டாள், உன் லீலாரஸங்களெல்லாவற்றையும் அவளே பெற்றாள் என்கிறாள். "முத்தம் தருதலும், உரைக்கும் அவ்வுரையும் ஒன்றும்

பெற்றிலேன்" என்று அந்வயம். வெகுளியாய் நின்று—சீறுபாறென்று பேசுதல் குழந்தைகளின் இயல்வாம். யசோதை ஒருவித நோன்பும் நோற்காதே யாத்ருச்சிகமாகவே கண்ணபிரானுடைய அதிமாநுஷ ஸீலவ்ருத்த வேஷங்களனைத்தையுங்காணப்பெற்றமை பற்றித் தெய்வநங்கை எனப்பட்டாள். (௬)

713 தண்ணந்தாமரைக்கண்ணனேகண்ணா தவழ்ந்தெழுந்துதளர்ந்ததோர்நடையால் *
மண்ணில்செம்பொடியாடிவந்து என்தன்மார்வில்மன்னிடப்பெற்றிலேனந்தோ! *
வண்ணச்செஞ்சிறுகைவிரலனைத்தும் வாரிவாய்க்கொண்டவடிசிலின்மிச்சல் *
உண்ணப்பெற்றிலேன் ஓ! கொடுவினையேன் என்னையென்செய்யப்பெற்றதெம்மோயே. (௮)

| | | | |
|---|---|---|---|
| தண் அம் தாமரை கண்ணனே | குளிர்ந்த அழகிய தாமரை போன்ற திருக்கண்களை யுடையவனே | வண்ணம் செம் சிறு | அழகுபெற்றுச் சிவந்து சிறிதான |
| கண்ணா | கண்ணபிரானே! | கை விரல் அனைத்தும் | கைவிரல்களெல்லாவற்றாலும் |
| தவழ்ந்து | (நீ) தவழ்ந்துகொண்டு | வாரி | வாரிக்கொண்டு |
| எழுந்து | எழுந்திருந்து | வாய்க்கொண்ட | அமுது செய்த |
| தளர்ந்தது ஓர் நடையால் | தட்டுத்தடுமாறி நடப்பதாகிற ஒரு நடையினால் | அடிசிலின் | ப்ரஸாதத்தினுடைய |
| செம் மண் பொடியில் | சிவந்த புழுதி மண்ணிலே | மிச்சல் | சேஷத்தை |
| ஆடி | விளையாடி | உண்ண பெற்றிலேன் | (நான்) உண்ணப் பெறவில்லை; |
| வந்து | (அக்கோலத்தோடே) வந்து | கொடு வினையேன் | (இவற்றை யெல்லாம் நான் இழக்கும்படியாக) மஹா பாபத்தைப் பண்ணினேன்; |
| என் தன் மார்வில் | என்னுடைய மார்விலே | ஓ | ஐயோ! |
| மன்னிட பெற்றிலேன் | நீ அணையும்படியான பாக்கியத்தைப் பெற்றிலேன்: | எம் மோய் | என் தாயானவள் |
| அந்தோ | இந்த என்ன தௌர்ப்பாக்கியம்! | என்னை | என்னை |
| | | என் செய்ய | எதுக்காக. |
| | | பெற்றது | பெற்றாளோ!. |

*** குளிர்ந்து அழகிய தாமரைப்பூப்போலே அலர்ந்த திருக்கண்களையுடைய கண்ணபிரானே! நீ செம்மண்ணிலே புழுதியளைந்து விளையாடும்போது தவழ்ந்து செல்வதனையும் தட்டுத் தடுமாறித் தரையில் காலூன்றியூன்றும் நடப்பதனையும் புழுதி மண்ணை அளைந்த அக்கோலத்தோடே வந்து என் மார்பிலே கட்டிக்கொண்டு கிடக்கப்பெற்றிலேனே!; எல்லாத் திருவிரல்களாலும் ப்ரஸாதத்தை வாரி அமுது செய்யும்போது வாயது கையதாகவிருந்த ப்ரஸாதத்தையு முண்ணப் பெற்றிலேனே!; ஆட்டின் கழுத்தில் முலை (அதர்) போலே என்னை என் தாய் வீணாகவேயன்றோ பெற்றாளென்கிறாள். "செம்மண் பொடியில் தவழ்ந்து ஆடி, எழுந்து தளர்ந்ததோர் நடையால் வந்து என்றன் மார்வில் மன்னிடப் பெற்றிலேன்" என்று அந்வயித்துப் பொருள் கொள்ளுதல் சாலச்சிறக்கும். இப்பாட்டின் முன்னடிகட்கு

"மக்கள் மெய்தீண்டலுடற்கின்பம்" என்னுங் குறளையும், பின்னடிகட்கு
"அமிழ்தினு மாற்ற வினிதே தம் மக்கள் சிறுகை யளாவிய கூழ்"

என்னுங் குறளையும் நினைக்க. (௯)

714 குழகனேயென்தன்கோமளப்பிள்ளாய் கோவிந்தாவென்குடங்கையில்மன்னி *
ஒழுகுபேரெழிலிளஞ்சிறுதளிர்போல் ஒருகையாலொருமுலைமுகம்நெருடா *
மழலைமென்னகையிடையிடையருளா வாயிலேமுலையிருக்கவென்முகத்தே *
எழில்கொள்நின்திருக்கண்ணிணைநோக்கந்தன்னையும் இழந்தேனிழந்தேனே. (௭)

| | | | |
|---|---|---|---|
| தொழுகையும் | அஞ்ஜலி பண்ணுகையும் (ஆகிற) | அசோதை | யசோதையானவள் |
| இவை | இவற்றையெல்லாம் | தொல்லை இன்பத்து | பரமாநந்தத்தினுடைய |
| கண்ட | நேரில் கண்ணாற்கண்டு அது பலித்த | இறுதி கண்டாள் | எல்லையை காணப்பெற்றாள். |

* * *—“தாரார் தடந்தோள்களுள்ளளவுங் கைநீட்டி, ஆராத வெண்ணெய்விழுங்கி” என்றபடி—வெண்ணெயிலுண்டான ஆதராதிசயத்தாலே கைமுழுதும் வெண்ணெய்க் குடத்திலே புகவிட்டு அளைவதனால் “ஆழவமுக்கி முகக்கினும் மாழ்கடல்நீர், நாழிமுகவாது நானாழி” என்கிற ந்யாயமான செய்தியையும் அறியாதே அவிவேகந்தோற்றச் செய்த காரியங்களைக் காணப் பெற்றிலேன், என்கிறாள் முதலடியில். “அடிப்பதற்கு”=அடிப்ப, அதற்கு எனப்பிரித் துரைத்தலுமாம்; தொகுத்தல்.

கண்ணன் தயிரைக் களவாடி உண்ணும்போது யசோதை கண்டு தடியும் தாம்பு மெடுத்தவாறே “தாயெடுத்த சிறுகோலுக் குளைந்தோடித், தயிருண்டவாய் துடைத்த மைந் தன்” என்றபடி அந்தத் தயிரை மறைப்பதாகத் துடைத்துக்கொள்ள ஆரம்பித்து வாய் நிறையச் சுற்றிலும் பூசிக்கொள்வன்; பிறகு யசோதையால் அடிபட்டு அழுவன், அஞ்சினாற் போல் நோக்குவன், வாய் துடிக்கும்படி விக்கி விக்கி அழுவன், கடைசியாக அஞ்ஜலிபண்ணு வன்; ஆக இக்கோலங்களையெல்லாம் கண்டு ஆநந்தத்தின் எல்லையிலே நிற்கும்படியான பாக்கி யம் யசோதைக்குக் கிடைத்ததேயன்றிச் சுமந்துபெற்ற எனக்குக் கிடைக்காமற் போயிற்றே! என்று வருந்துகின்றாள். [தொல்லையின்பத்திறுதி கண்டாளே.] “ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த:” என்ற உபநிஷத்தின்படி—தொல்லையின்பம் என்று எம்பெருமானாகிய கல்யாணனையே சொல் கிற்றாய், அபரிச்சிந்நனான அவனை யசோதை பரிச்சிந்நனாக்கி விட்டாளே! என்றுரைப்பது மொன்று. அழுகையும் தொழுகையும் பரிச்சிந்நர்களுடைய க்ருத்யமிறே. [பரிச்சிந்நர்—அளவுபட்டவர்.] (௮)

716 குன்றினல்குடைகவித்ததும் கோலக்குரவைகோத்ததும்குடமாட்டும் *
கன்றினல் விளவெறிந்ததும் காலால்காளியன்தலைமிதித்ததும்முதலா *
வென்றிசேர்பிள்ளைநல்விளையாட்டமனைத்திலும் அங்கென்னுள்ளமுள்குளிர *
ஒன்றுங்கண்டிடப்பெற்றிலேனடியேன் காணுமாறினியுண்டெனிலருளே. (௯)

| | | | |
|---|---|---|---|
| குன்றினால் குடை கவித்ததும் | கோவர்த்தன மலையைக் குடையாகத் தாங்கி நின்றதும் | நல் பிள்ளை விளையாட்டம் அனைத்திலும் | விலக்ஷணமான பால்ய சேஷ்டிதங்க ளெல்லாவற்றினுள்ளும் |
| கோலம் குரவை கோத்ததும் | அழகாக ராஸக்ரீடை செய்ததும் | ஒன்றும் | ஒரு சேஷ்டிதத்தையும் |
| குடம் ஆட்டும் | குடக்கூத்தாடினதும் | என் உள்ளம் உள் குளிர | என் நெஞ்சு குளிரும்படி |
| கன்றினால் விளவு எறிந்ததும் | கன்றாய் வந்த ஒரு அசுரனைக் கொண்டு (அஸுராவேசமுடைய) விளங்காய்களை உதிர்த்ததும் | அடியேன் | நான் |
| | | அங்கு கண்டிட பெற்றிலேன் | அச்சேஷ்டிதங்களை நீ செய்த விடத்தில் கண்ணாரக்கண்டு களிக்கப் பெற்றிலேன்; |
| காலால் காளியன் தலை மிதித்ததும் முதலா | திருவடிகளாலே காளிய நாகத்தின் தலையை மர்த்தித்ததும் (ஆகிய இவை) முதலாக வுள்ள | இனி | இப்போது |
| | | காணும் ஆறு | (அவற்றை நான்) காணத்தக்க உபாயம் |
| | | உண்டு எனில் | இருக்குமாகில் |
| வென்றி சேர் | வெற்றி பொருந்திய | அருள் | கிருபைசெய்தருளவேணும். |

* * * உனது சேஷ்டைகளை யசோதைக்குக் காட்டினையேயன்றிப் பாவியேன் கண்ணுக்கு நீ ஒன்றையுங் காட்டவில்லை; நீ கடந்தவற்றையெல்லாம் எனக்காக மறுபடி யும் ஒருதடவை செய்து காட்டக்கூடுமோ என் அப்பனே! என்கிறாள். (௯)

ஸ்ரீ ராமாவதாரத்தில் கௌஸல்யை பெற்ற பேற்றைக்கருதி, அவள் அவ்விராம பிரானைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டுக் கூறின முகத்தால் இத்திருமொழி அருளிச்செய்கிறார். இவ்வநுபவம் இவர்க்குத் திருக்கண்ணபுரத்தெம்பெருமான் விஷயத்திலே செல்லுகிறது.

719 மன்னுபுகழ்க்கௌசலைதன் மணிவயிறுவாய்த்தவனே! *
தென்னிலங்கைக்கோன்முடிகள் சிந்துவித்தாய்செம்பொன்சேர் *
கன்னிநன்மாமதிள்புடைசூழ் கணபுரத்தென்கருமணியே! *
என்னுடையவின்னமுதே இராகவனே!தாலேலோ. (க)

| | | | |
|---|---|---|---|
| மன்னு புகழ் | நிலைநின்ற புகழையுடைய | நல் | விலக்ஷணமாய் |
| கௌசலை தன் | கௌஸல்யையினுடைய | மா | பெரிதான |
| மணி வயிறு | அழகிய வயிற்றிலே | மதில் | திருமதிளாலே |
| வாய்த்தவனே | ஸ்ரீமானாகத் திருவவதரித்தவனே! | புடை சூழ் | நாற்புறமும் சூழப்பட்ட |
| தென் இலங்கை கோன் | தென்னிலங்கைக்கு இறைவனான ராவணனுடைய | கணபுரத்து | திருக்கண்ணபுரத்திலெழுந்தருளியிருக்கிற |
| முடிகள் | பத்துத் தலைகளையும் | என் கரு மணியே | நீலரத்நம் போன்ற எம்பெருமானே! |
| சிந்துவித்தாய் | சிதறப் பண்ணினவனே! | என்னுடைய இன் அமுதே | எனக்கு போக்யமான அம்ருதமா யிருப்பவனே] |
| செம் பொன் சேர் | செவ்விய பொன்னாலே செய்யப்பட்டதாய் | இராகவனே! | ஸ்ரீராமனே! |
| கன்னி | அழிவில்லாததாய் | தாலேலோ | (உனக்குத்) தாலாட்டு. |

* * *—இதில், முதலடியால் அவதாரமும், இரண்டாமடியால் அவதார ப்ரயோஜநமும் சொல்லப்பட்டன வென்க. கணபுரம்—கண்ணபுரம் என்பதன் தொகுத்தல்; திருக்கண்ண புரம் என்னும் இத் திவ்யதேசம் சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதில் ஒன்று: இத்தலத்தில் சௌரிராஜப்பெருமாள் மிகவும் வரப்ரஸாதி என்பது ப்ரஸித்தம். நம்மாழ்வார், திருமங்கை யாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகராழ்வார்-ஆகிய ஐவர்களால் மங்களாசாஸநஞ் செய்யப்பெற்ற சிறந்த திவ்யதேசம் இது. தாலேலோ=வளர்பிள்ளையைத் தொட்டிலிலே வளர்த்திக் கண்வளரப் பண்ணுகைக்காகச் சீராட்டித் தாலாட்டுதல்; தால்—நாக்கு: தமிழில் தோன்றும் தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்றாகிய பிள்ளைத்தமிழில் இத்தாலாட்டை யெட் டாம் மாதத்திற் கூறுவது வழக்கு. (க)

720 புண்டரீகமலரதன்மேல் புவனியெல்லாம்படைத்தவனே *
திண்டிறலாள்தாடகைதன் உரமுருவச்சிலைவளைத்தாய் *
கண்டவர்தம்மனம்வழங்கும் கணபுரத்தென்கருமணியே *
எண்டிசையுமாளுடையாய் இராகவனே! தாலேலோ. (உ)

| | | | |
|---|---|---|---|
| புண்டரீகம் மலர் அதன் மேல் | (திருநாபியில் அலர்ந்த) தாமரைப் பூவின்மேல் (பிரமனைத் தோற்றுவித்து அவன் மூலமாக) | கண்டவர் | ஸேவித்தவர்கள் |
| புவனி எல்லாம் படைத்தவனே | உலகங்களெல்லாவற்றையும் ஸ்ருஷ்டித்தவனே! | தம் மனம் வழங்கும் | தங்கள் மனத்தைத் தாங்களே இசைந்து கொடுப்பதற்குக் காரணமான |
| திண் திறலாள் தாடகைதன் | த்ருடமான பலத்தை யுடையவளான தாடகையினுடைய | | கணபுரத்து என் கருமணியே!—; |
| உரம் உருவ | மார்பைத் துளைக்கும்படியாக | எண் திசையும் | எட்டுத் திக்கிலுள்ளவர்களையும் |
| சிலை வளைத்தாய் | வில்லை வளைத்து அம்புகளை எய்தவனே! | ஆள் உடையாய் | அடிமை கொண்டருளுபவனே! |
| | | | இராகவனே! தாலேலோ—. |

721 கொங்குமலிகருங்குழலாள் கௌசலைதன்குலமதலாய் *
தங்குபெரும்புகழ்ச்சனகன் திருமருகா! தாசரதீ *
கங்கையிலும்தீர்த்தமலி கணபுரத்தென்கருமணியே *
எங்கள்குலத்தின்னமுதே இராகவனே! தாலேலோ. (௫)

கொங்கு மலி கருங்குழலாள் — பரிமளம் மிகுந்த கறுத்த கூந்தலையுடையவளான
கௌசலை தன் — கௌஸல்யையினுடைய
குலம் மதலாய் — சிறந்த பிள்ளையானவனே!
தங்கு பெரு புகழ் சனகன் — பொருந்திய மஹாகீர்த்தியையுடைய ஜநக மஹாராஜனுக்கு
திரு மருகா — மாப்பிள்ளையானவனே!
தாசரதீ — சக்ரவர்த்தி திருமகனே!
கங்கையிலும் — கங்காநதியிற் காட்டிலும்
மலி தீர்த்தம் — சிறப்பு மிக்க தீர்த்தங்களையுடைய
கணபுரத்து — திருக்கண்ணபுரத்திலெழுந்தருளியிருக்கிற
என் கருமணியே!—;
எங்கள் குலம் — எங்கள் ராஜவம்சத்துக்கெல்லாம்
இன் அமுதே — போக்யமான அம்ருதம் போன்றவனே!
இராகவனே! தாலேலோ—.

எங்கள் குலத்து இன்னமுதே=ஸ்ரீராமன் ரகுவம்ஸத்திற் பிறந்தாற்போல இக்குலசேகராழ்வாரும் ரகுவம்ஸத்திற் பிறந்தவராதலால் இங்ஙனமருளிச் செய்தாரென்க. (௫)

722 தாமரைமேலயனவனைப் படைத்தவனே! * தயரதன்தன்
மாமதலாய் மைதிலிதன்மணவாளா! * வண்டினங்கள்
காமரங்களிசைபாடும் கணபுரத்தென்கருமணியே *
ஏமருவுஞ்சிலைவலவா! இராகவனே! தாலேலோ. (௬)

தாமரை மேல் — (திருநாபிக்) கமலத்திலே
அயன் அவனை படைத்தவனே — பிரமனை உண்டாக்கினவனே!
தயரதன் தன் மா மதலாய் — தசரதனுடைய மூத்த குமாரனே!
மைதிலி தன் மணவாளா — பிராட்டிக்கு வல்லபனே!
வண்டு இனங்கள் — வண்டுகளின் கூட்டங்கள்
காமரங்கள் இசைபாடும் — காமரமென்னும் இசையைப் பாடப்பெற்ற
கணபுரத்து — திருக்கண்ணபுரத்தி லெழுந்தருளியிருக்கிற
என் கருமணியே!—;
ஏ மருவும் சிலை வலவா — அம்புகள் பொருந்திய (ஸ்ரீசார்ங்கமென்னும்) வில்லை ஆளவல்லவனே!
இராகவனே! தாலேலோ—.

* * * "தாமரைமேல் அயனவனைப் படைத்தவனே!" என்று சொல்லி, "தயரதன்றன் மாமதலாய்!" என்று சொன்னவிது—ஸகல விபூதிக்கும் பிதாவாகிய நீ இவ்விபூதியில் ஒரு பிபீலிகப்ராயனான தசரதனைப் பிதாவாகக்கொண்டு 'அவனுடைய பிள்ளை' என்னும்படியாகப் பிறந்த அதிசயம் என்கொல்! என வியந்தவாறும்.

"ஏமருவுஞ்சிலை" ஏ—எய்கையிலே, மருவும்—பூட்டாநின்ற, சிலை—வில், என்றும் பொருளாகலாம்: ஆரேனும் பிடிக்கிலும் எய்கையிலே பூட்டும் வில் என்பது கருத்து: வெகு சாதுரியமாய் அடக்கி ஆளத்தக்க வில்—என்றவாறு: இக்கருத்துத் தோன்றவே பெரியாழ்வாரும் "சார்ங்கமென்னும் வில் ஆண்டான்றன்னை" என்றருளிச் செய்தாரென்க. (௬)

723 பாராளும்படர்செல்வம் பரதநம்பிக்கேயருளி *
ஆராவன்பிளையவனோடு அருங்கானமடைந்தவனே! *
சீராளும்வரைமார்பா! திருக்கண்ணபுரத்தரசே! *
தாராளும்நீண்முடி என்தாசரதீ! தாலேலோ. (௭)

என்று உறுதிமொழி கூறிய இராமபிரான் அந்தப் பிரதிஜ்ஞையை நிறைவேற்றுதற்பொருட்டு தண்டகாரணியத்திற்குப் புறப்படுங்கால் பிராட்டி பெருமானை நோக்கி, 'ஆரியரே! தாபஸவ்ருத்தியை அவலம்பித்துவந்து சேர்ந்தவிடத்தில் க்ஷத்ரியவ்ருத்தியைப் பாராட்டக் கருதுவது உமக்குத் தகுதியல்ல; உமது விஷயத்தில் ஒரு குற்றமுஞ் செய்யாத பிராணிகளை நீர் கொல்ல முயல்வது அநியாயமாகும்' என்று பலவாறாக உணர்த்த; அது கேட்ட இராமபிரான், "ஸீதே! நான் பிராணனை விட்டாலும் விடுவேன்; லக்ஷ்மணனையும் உன்னையும் விட்டாலும் விடுவேன்; யாருக்காவது பிரதிஜ்ஞை செய்துகொடுத்து அதிலும் பிராமணர்களுக்குப் பிரதிஜ்ஞைசெய்து கொடுத்து அதைமாத்திரம் நிறைவேற்றாது விடவேமாட்டேன்; ரிஷிகள் தாம் என்னிடம் வந்து முறையிடாமற் போனாலுங்கூட அவர்களை ஸம்ரக்ஷிப்பது எனது கடமை; பிரதிஜ்ஞையும் பண்ணிக் கொடுத்துவிட்ட பின்னர் இனி நான் தவறக்கூடுமோ?" என்று சரக்கற வார்த்தை சொல்லி அம்முனிவர்களைக் காத்தருளினவாறு கூறும் "அருமருந்தே!" என்னும் விளி. (சு)

725 ஆலினிலைப்பாலகனாய் அன்றுலகமுண்டவனே! *
வாலியைக்கொன்றரசு இளையவானரத்துக்களித்தவனே! *
காலின்மணிகரையலைக்கும் கணபுரத்தென்கருமணியே! *
ஆலிநகர்க்கதிபதியே அயோத்திமனே! தாலேலோ. (எ)

அன்று — முன்பு மஹாப்ரளயம் வந்தபோது
ஆலின் இலை — ஓர் ஆலந்தளிரிலே
பாலகன் ஆய் — குழந்தை வடிவாய்க்கொண்டு
உலகம் உண்டவனே — லோகங்களையெல்லாம் திருவயிற்றில் வைத்து நோக்கினவனே!
வாலியை கொன்று — வாலியைக் கொலைசெய்து
இளைய வானரத்துக்கு — அவனது தம்பியான ஸுக்ரீவனுக்கு
அரசு அளித்தவனே — ராஜ்யத்தைக் கொடுத்தவனே!

காலின் மணி — கால்வாய்களிலுள்ள ரத்னங்களை
கரை அலைக்கும் — கரையிலே கொண்டு கொழிக்கப்பெற்ற
கணபுரத்து — திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கிற
என் கரு மணியே!—,
ஆலி நகர்க்கு அதிபதியே — திருவாலி திருநகரிக்கு நிர்வாஹனே!
அயோத்தி மனே — அயோத்தி நகர்க்கு அரசனே!
தாலேலோ—.

"காலின்மணி கரையலைக்கும்"—உள்ளுக்கிடக்கிற ரத்னங்களைக் காற்றாலே கரையிற் கொழிக்குமென்னுதல், அன்றி, கால் என்று கால்வாய்களைச் சொல்லிற்றாய், கால்வாய்களிலுள்ள மணிகளைக் கொண்டுவந்து கரையிலே எறிடுமென்னுதல். "ஆலிநகர்க் கதிபதியே" என்றவிடத்தில், "ஒரு வாலியைக்கொன்று ஒரு வாலி தன்னைத் துணையாகக்கொள்ளப்பெற்றதே!" என்று சாடூக்தி அருளிச் செய்வர் பெரியவாச்சான் பிள்ளை. (எ)

726 மலையதனாலணைகட்டி மதிளிலங்கையழித்தவனே! *
அலைகடலைக்கடைந்து அமரர்க்கமுதருளிச்செய்தவனே! *
கலைவலவர்தாம்வாழும் கணபுரத்தென் கருமணியே! *
சிலைவலவா! சேவகனே சீராமா! தாலேலோ. (அ)

மலை அதனால் அணைகட்டி — மலைகளைக்கொண்டு ஸேதுபந்தனம் பண்ணி
மதிள் இலங்கை அழித்தவனே — அரணையுடைத்தான லங்காபுரியைப் பாழ்படுத்தினவனே
அலை கடலை கடைந்து — அலையெறிகின்ற திருப்பாற்கடலைக்கடைந்து
அமரர்க்கு — தேவர்களுக்கு
அமுது — அம்ருதத்தை
அருளிச் செய்தவனே — கொடுத்தருளினவனே!

கலை வலவர் தாம்வாழும் கணபுரத்து — ஸகல சாஸ்த்ரங்களையும் அறிந்தவர்கள் வாழ்கிற திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கிற
என் கரு மணியே!—;
சிலைவலவா — (ஸ்ரீ சார்ங்கமென்னும்) வில்லைச் செலுத்த வல்லவனே!
சேவகனே — வீரனே!
சீராமா! தாலேலோ—;

சேவகனே !=சேவகம் என்று பராக்கிரமத்துக்குப் பெயராதலால், மறவீரனே! என்றபடி. "சிலைவலவா! சேவகனே!" என்ற சேர்த்தியால், சார்ங்கமும் கையு மன்றுப் படியான வீரப்பாடுடையவன் என்பது போதரும். (அ)

727 தளையவிழும்கறுங்குஞ்சித் தயரதன்தன்குலமதலாய் ! *
வளையவொருசிலையதனால் மதிளிலங்கையழித்தவனே ! *
களைகழுநீர்மருங்கலரும் கணபுரத்தென்கருமணியே ! *
இளையவர்கட்கருளுடையாய் இராகவனேதாலேலோ. (௯)

| | | | |
|---|---|---|---|
| தளை அவிழும் கறு குஞ்சி | கட்டு அவிழும்படியான கறுத்த நிறமுடைய மயிர்முடியை யுடையவனான | மருங்கு அலரும் கணபுரத்து | சுற்றிலும் மலரப் பெற்ற திருக்கண்ணபுரத்தி லெழுந்தருளி யிருக்கிற |
| தயரதன் தன் | தசரத சக்ரவர்த்தியினுடைய | என் கரு மணியே!—; | |
| குலம் மதலாய் | சிறந்த திருக்குமாரனே! | இளையவர்கட்கு | இளையவர்கள் விஷயத்திலே |
| ஒரு சிலை வளைய | ஒப்பற்ற வில்லானது வளைய | அருள் உடையாய் | கருணை பொருந்தியவனே! |
| அதனால் | அந்த வில்லாலே | இராகவனே! தாலேலோ—. | |
| மதிள் இலங்கை அழித்தவனே!—; | | | |
| களை கழுநீர் | களையாகப் பறிக்கப்பட்ட செங்கழுநீர்கள் | | |

* * *—இளையவர்கட்கு அருளுடையாய்!=வாலியை வதைத்து இளையவனான ஸுக்ரீவனுக்கு அருள்புரிந்தான்; இராவணனை வதைத்து இளையவனான விபீஷணனுக்கு அருள்புரிந்தான் என்கிறே பெருமானுக்கு ப்ரஸித்தி. துர்ப்பலர்களாய் இளைத்திருப்பவர்கள் திறத்தில் அருள் செய்பவன் என்றுமாம். (௯)

728 தேவரையுமசுரரையும் திசைகளையும்படைத்தவனே ! *
யாவரும்வந்தடிவணங்க அரங்கநகர்த்துயின்றவனே ! *
காவிரிநன்னதிபாயும் கணபுரத்தென்கருமணியே ! *
ஏவரிவெஞ்சிலைவலவா இராகவனே ! தாலேலோ. (௰)

| | | | |
|---|---|---|---|
| தேவரையும் | தேவர்களையும் | பாயும் | ப்ரவஹிக்கப்பெற்ற |
| அசுரரையும் | அசுரர்களையும் | கணபுரத்து | திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கிற |
| திசைகளையும் | திக்குக்களையும் [அதாவது—எல்லா ப்ரதேசங்களையும்] | என் கரு மணியே!—; | |
| படைத்தவனே | ஸ்ருஷ்டித்தவனே! | ஏ வரி வெம் சிலை வலவா | அம்புகள் தொடுக்கப் பெற்று அழகியதாய்(ச் சத்துருக்களுக்கு)க் கொடிதாயிருந்துள்ள வில்லை ஆளவல்லவனே! |
| யாவரும் வந்து அடி வணங்க | ஸகல சேதநரும் வந்து திருவடிகளில் ஸேவிக்கும்படியாக | இராகவனே! தாலேலோ—, | |
| அரங்கம் நகர் | ஸ்ரீரங்கத்திலே | | |
| துயின்றவனே | பள்ளி கொண்டிருப்பவனே! | | |
| காவிரி நல் நதி | காவேரி யென்கிற சிறந்த நதியானது | | |

729 கன்னிநன்மாமதிள்புடைசூழ் கணபுரத்தென்காகுத்தன்
தன்னடிமேல் * தாலேலோவென்றுரைத்த தமிழ்மாலை *
கொன்னவிலும்வேல்வலவன் குடைக்குலசேகரன்சொன்ன
பன்னியநூல்பத்தும்வல்லார் பாங்காயபத்தர்களே. (கக)

| | |
|---|---|
| என் காகுத்தன் தன் அடிமேல் | என் ஸ்வாமியான இராமபிரான் விஷயமாக |
| தாலேலோ என்று உரைத்த | (கௌஸல்யை) தாலாட்டிச் சொன்ன பாசுரங்களை, (உட்கொண்டு) |
| கொல் நவிலும் வேல் வலவன் குடை குலசேகரன் | கொலைத்தொழில் புரிகின்ற வேலாயுதத்தைச் செலுத்த வல்லவரும் குடையையுடையவருமான குலசேகராழ்வார் |
| கன்னி நல் மா மதிள் புடைசூழ் கணபுரத்து | சாச்வதமான சிறந்த அழகிய மதிள்கள் நாற்புறமும் சூழப்பெற்ற திருக்கண்ணபுரத்திலே |
| சொன்ன | அருளிச்செய்த |
| பன்னிய நூல் தமிழ் மாலை பத்தும் | பரம்பியதாய் ஸ்லக்ஷணமாய்த் தமிழ்ப்பாமாலையான இப்பத்துப்பாசுரங்களையும் |
| வல்லார் | அதிகரிக்க வல்லவர்கள் |
| பாங்கு ஆய பத்தர்கள் | அமைந்த பக்திமான்களாகப் பெறுவர். |

∴ * *—பாங்காய பத்தர்கள் = கௌஸல்யை நிருத்தாயாராயிருந்து அநுபவித்தாற்போலவும், இவ்வாழ்வார் பக்தராயிருந்து அநுபவித்தாற்போலவும் பகவதநுபவத்தைப் பெறுவரென்க. (கக)

அடிவரவு:—மன்னு புண்டரிக கொங்கு தாமரை பார் சுற்றம் ஆலின் மலை தளை தேவர் கன்னி வன்தாள்.

## ஒன்பதாந் திருமொழி—வன்றாளினிணை.

சக்கரவர்த்தி இராமனைப் பிரிந்தவளவிலே இரங்கிப் பேசின பேச்சுக்களின் வடிவமாக அருளிச் செய்வது, இத்திருமொழி.

730 வன்றாளினிணைவணங்கி வளநகரம்தொழுதேத்தமன்னனாவான்
நின்றாயை * அரியணைமேலிருந்தாயை நெடுங்கானம்படரப்போகு *
என்றாளெம்மிராமாவோ உனைப்பயந்தகைகேசிதன்சொற்கேட்டு *
நன்றாகநானிலத்தையாள்வித்தேன் நன்மகனேயுன்னைநானே. (க)

| | |
|---|---|
| எம் இராமாவோ | ஓ எமது இராமனே! |
| வளம் நகரம் | அழகிய அயோத்திமாநகரத்துப் பிரஜைகளனைவரும் |
| வல் தாளின் இணை வணங்கி தொழுது ஏத்த | (சரணமடைந்தவர்களை எப்பொழுதும் விடாமற்பாதுகாக்கும்) வலிமையையுடைய (உனது) இரண்டு திருவடிகளிலும் (விழுந்து) நமஸ்கரித்து (எழுந்து) கைகூப்பி நின்று துதிக்க; |
| மன்னன் ஆவான் நின்றாயை | அரசனாகப் பட்டாபிஷேகஞ் செய்து கொள்ளுதற்கு எத்தனித்து நின்றவனும் |
| அரி அணை மேல் இருந்தாயை | சிங்காசனத்தின் மீது வீற்றிருக்க விருந்தவனுமான உன்னை |
| நெடுங்கானம் படர போகு என்றாள் | 'பெரியகாட்டிற் சென்றடைந்து (இங்கு நின்றும் நீங்கிப்) போ' என்று (கைகேயி) கூறினாள்; |
| நல் மகனே | நல்ல குமாரனே! |
| நான் | நான் |
| உனை பயந்த கைகேசி தன் சொல் கேட்டு | உன்னைப் பெற்று வளர்த்த தாயான கைகேயியின் வார்த்தையைக்கேட்டு |
| நன்றாக உன்னை நானிலத்தை ஆள்வித்தேன் | நன்றாக உன்னை நிலவுலகத்தை ஆளும்படி செய்தேன். |

* * * "நன்றாக உன்னை நானிலத்தை ஆள்வித்தேன்" என்றது—'கல்லைக்கடிக்க நன்றாய்ச் சமைத்தாய்' என்பது போன்ற விபரீதலக்ஷணை. இப்படி நான் உன் பக்கல் பெருந்தீங்கு செய்தவிடத்திலும் நீ சிறிதும் குணங் குறைந்தாயில்லை; உன் குணம் மேன்மேல் மிக்கு விளங்கப்பெற்றாய்; நானே குணக்கேடுடையனாய் நின்றேன் என்பான் "நன்மகனே!" என்று விளித்தான்: புத்ரலக்ஷணங்களைப் பூர்த்தியாகவுடையவன் என்றபடி: தன் சொல் தவறாது நடக்குமவனான மகனென்க. ஈற்றடி இரக்கத்தை நன்கு விளக்கும். போகு—என்றாள் = போகென்றாள் என்று புணர்த்தக்கது, சிறுபான்மை உயிர்வரக் குற்றியலுகரம்

| | | | |
|---|---|---|---|
| மெல் அடிகள் குருதி சோர | மென்மையான (உனது) பாதம் களிலின்று ரக்தம் பெருகவும் | விரும்பாத கான் விரும்பி போயினாய் | (எவரும்) விரும்பாத காட்டை (நான் போகச் சொன்னே னென்பதற்காக) விரும்பி (அவ்விடத்துக்குச் சென்றாய்; |
| வெயில் உறைப்ப | (மேலே) வெயிலுறைக்கவும் | கேகயர்கோன் மகள் ஆய்ப்பெற்ற அரும்பாவி | கேகயராஜன் பெற்ற மகளான கொடிய பாவியாகிய கைகேயியினுடைய |
| வெம் பசி நோய் கூர | (வேண்டியபோது உணவு கிடையாமையால்) வெவ்விய பசியாகிய நோய் மிகவும். | சொல் கேட்ட அருவினையேன் யான் | வார்த்தையைக் கேட்ட கொடியேனாகிய நான் |
| பெரும் பாவியேன் மகனே | மஹாபாபியான எனது மைந்தனே! | அந்தோ! என் செய்கேன் | ஐயோ! என்ன செய்வேன்! |
| இன்று | இப்பொழுது | | |

* * *—எப்படிப்பட்ட கல்நெஞ்சினரும் செய்யமாட்டாத ஒருமஹா பாபத்தைச் செய்பவளான ஒரு பாபமூர்த்தியைக் கேகயராஜன் பெண்ணாய்ப் பெற்றான்; அவள் வார்த்தையிலே அகப்பட்டுக்கொண்டு நான் பரிஹாரமில்லாததொரு செயலைச் செய்துவிட்டேன்; இனி இதற்கு நான் செய்யக்கூடிய பரிஹாரம் ஒன்றுமில்லையே! என்று பச்சாத்தாபத்தோடு கூறுகிறபடி. மஹாபாபியான எனக்கு மகனாய்ப் பிறந்தமையாலன்றோ ஸுகுமாரனான நீ இவ்வளவு மஹா வனத்துக்குச் செல்ல நேர்ந்தது என்பான் "பெரும்பாவியேன் மகனே!" என்றான். வெம்பசி நோய் கூர=கூர—மிகுதியுணர்த்தும் கூர் என்ற உரிச்சொற்பகுதியினடியாய்ப் பிறந்த செயவெனெச்சம். கேகயர்—கேகய தேசத்திலுள்ளவர்கள். (௭)

735 அம்மாவென் றுகந்தழைக்கும் ஆர்வச்சொல்கேளாதேயணிசேர்மார்வம் *
என்மார்வத்திடையழுந்தத் தழுவாதேமுழுசாதேமோவாதுச்சி*
கைம்மாவின்நடையன்னமென்னடையும் கமலம்போல்முகமுங்காணாது *
எம்மானையென்மகனையிழந்திட்ட இழிதகையேனிருக்கின்றேனே. (௮)

| | | | |
|---|---|---|---|
| அம்மா என்று உகந்து அழைக்கும் | 'ஐயா!' என்று மகிழ்ச்சி கொண்டு (எப்போதும்) அழைக்கின்ற | கைம்மாவின் நடை அன்ன மென்னடையும் | யானையினது நடைபோன்ற [கம்பீரமான அம்மகனது] மென்மையான நடையின் அழகையும் |
| ஆர்வம் சொல் | ப்ரீதி விளங்குஞ்சொல்லை | கமலம் போல் முகமும் | தாமரை மலர்போன்ற (அவனது) முகப்பொலிவையும் |
| கேளாதே | (யான்) கேட்கப் பெறாமலும் | காணாது | காணாமலும் |
| அணி சேர் மார்வம் | ஆபரணங்கள் பொருந்திய (என் மகனது) மார்பு | எம்மானை என் மகனை இழந்திட்ட | எமது ஐயனான என்மகனைக் (காட்டுக்குப்போக்கி) இழந்துவிட்ட |
| என் மார்வத்திடை அழுந்த | என் மார்பிலே அழுந்தும்படி | இழி தகையேன் | இழிவான செயலைச் செய்தவனான நான் |
| தழுவாதே | (நான் அவனை இறுக அணைத்துக்கொள்ளாமலும் | இருக்கின்றேனே | (இன்னமும் அழிந்திடாமல்) உயிர் வாழ்ந்திருக்கின்றேனே. |
| முழுசாதே | (அந்த ஆலிங்கன போகக் கடலில்) முழுகாமலும் | | |
| உச்சிமோவாது | உச்சியை மோந்திடாமலும் | | |

* * * ப்ரீதிப்ரகர்ஷம் தோன்ற ஐயா! என்று அழைக்கும் மகனது இன்சொல்லைக் கேட்கப்பெறாமலும் இயற்கையழகோடு செயற்கையழகு செய்யும் ஆபரணங்கள் அசைந்து விளங்குகின்ற அவனது மார்பைத்தழுவிக் கொள்ளப் பெறாமலும், ஆலிங்கனஸாகரத்தில் அழுந்தப்பெறாமலும், உச்சிமோரப் பெறாமலும் நடையழகு காணப்பெறாமலும், முகாரவிந்தத்தை அநுபவிக்கப் பெறாமலும் என் கண்மணியைக் காட்டுக்குத்துரத்தின படுபாவியாகிய நான் அப்போதே சாவாமல் இன்னும் பிழைத்திருக்கவும் வேணுமா! என்று பரிதபிக்கிறபடி. அம்மா வென்று=தந்தையை அம்மாவென்று அழைத்தல், உவப்புப்பற்றிய பால் வழுவமைதி: "உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும், இழிப்பினும் பால்திணை இழுக்கினு மியல்பே." என்பது நன்னூல். (பொதுவியல்-௨௰) (௮)

736 பூமருவு நறுங்குஞ்சி புன்சடையாப் புனைந்து பூந்துகில்சேரல்குல் *
காமரெழில்விழலுடுத்துக் கலனணியாதங்கங்களழகுமாறி *
ஏமருதோளென்புதல்வன் யானின்றுசெலத்தக்கவனந்தான்சேர்தல் *
தூமறையீரிதுதகவோ?சுமந்திரனே!வசிட்டனே! சொல்லீர்நீரே. (எ)

| | | | |
|---|---|---|---|
| தூ மறையீர் | நித்ய நிர்த்தோஷமான வேதத்தை ஓதியிருக்கிற ப்ராமணர்களே! | காமர் எழில் விழல் உடுத்து | காண்கைக்கு ஆசைப்படத்தக்க அழகிய விச்வாமித்ரத்தைக் கயிறாக முறுக்கிச் சாத்தி |
| சுமந்திரனே | (ராஜகார்யத்தை நன்கறிந்து நடத்திப் போந்த) ஸுமந்த்ரரே! | கலன் அணியாது | திருவாபரணங்கள் அணியாமல் |
| வசிட்டனே | (ராஜதர்மங்களை உபதேசித்துப் போருகிற) வஸிஷ்ட மஹர்ஷியே! | அங்கங்கள் அழகு மாறி | இயற்கை அழகுக்கு மேல் திருவாபரணங்களால் உண்டாகக் கூடிய செயற்கை அழகின்றியிலே, |
| (உங்களை ஒரு விஷயம் கேட்கிறேன்) | | ஏமரு தோள் என் புதல்வன் தான் | ரக்ஷகமான தோள்களையுடையவனான என்னுடைய குமாரனானவன் |
| பூ மருவும் நறு குஞ்சி | புஷ்பம் மாறாதே இருப்பதாய் மணம் கமழாநின்ற திருக்குழலை | யான் இன்று செல தக்க வனம் சேர்தல் இது | நான் இப்போது போகவேண்டிய காட்டுக்குத் தான் போவது |
| புன் சடை ஆ புனைந்து | விகாரமான ஜடையாகத் திரித்து | தகவோ | தகுதியானதோ? |
| பூ துகில் சேர் அல்குல் | நல்ல பட்டுப் பீதாம்பரங்கள் சாத்தவேண்டிய திருவரையிலே | நீரே சொல்லீர் | (தர்மஜ்ஞரான) நீங்களே (ஆராய்ந்து) சொல்லுங்கள். |

* * * நல்ல புஷ்பங்களைச் சூடிப் பரிமளம் விஞ்சக்கடவதான திருக்குழலைச் சடையாகத் திரித்தும், நான் அறுபதினாயிரமாண்டு அரசாண்டு ஸம்பாதித்து வைத்திருக்கும் பட்டுப் பீதாம்பரங்களில் நல்லவற்றைச் சாத்தக்கடவதான திருவரையில் விச்வாமித்ரத்தைக் கயிறாக முறுக்கிச் சாத்தியும், இயற்கையான அழகுக்கு மேலே செயற்கையழகுக்காக ஆபரணங்களைச் சாத்தவேண்டிய அவயவங்களில் அவற்றைச் சாத்திக்கொள்ளவும் பெறாமல் அந்தோ! என் மைந்தன் காட்டுக்குச் சென்றனனே! ஐயோ! இக்காடு இத்தவயதில் அவனுக்குச் செல்லக் கூடியதா? அறுபதினாயிரமாண்டு போகங்களை புஜித்துப் பல்கிழந்து தலைநரைத்து உடல் வளைந்து உடை குலைப்பட்ட நான் இன்று போகக்கூடியதான காட்டிற்கு எனது மைந்தன் சென்றிருனே! இது என்ன அநியாயம்!! தர்மங்களை அறிந்தும் அநுஷ்டித்தும் உபதேசித்தும் போருகிற மஹாநுபாவர்களே! இது நியாயந்தானோ? நீங்கள் சற்று ஆராய்ந்து சொல்லுங்கள்! என்கிறான்.

737 பொன்பெற்றாரெழில்வேதப்புதல்வனையும் தம்பியையும்பூவைபோலும் *
மின்பற்றாநுண்மருங்குல் மெல்லியலென்மருகியையும்வனத்திற்போக்கி *
நின்பற்றாநின்மகன்மேற்பழிவிளைத்திட்டு என்னையும்நீள்வானில்போக்க *
என்பெற்றாய்கைகேசீ இருநிலத்திலினிதாகவிருக்கின்றாயே. (அ)

| | | | |
|---|---|---|---|
| கைகேசீ | கைகேயியே | | |
| பொன் பெற்றார் எழில் வேதம் புதல்வனையும் | கல்விச் செல்வத்தைப் பெற்றவர்களான உபாத்தியாயர்களிடமிருந்து அழகிய வேதங்களை ஓதியிருக்கிற மூத்த மகனான இராமனையும் | மின் பற்றா நுண் மருங்குல் மெல் இயல் என் மருகியையும் | மின்னலும் ஈடாகமாட்டாத நுண்ணிய இடையையும் மென்மையான தன்மையையுமுடையவளுமான என் மருமகளாகிய ஸீதையையும் |
| தம்பியையும் | (அவனது) தம்பியான லக்ஷ்மணனையும் | வனத்தில் போக்கி | காட்டுக்குப் போகச்செய்து |
| பூவை போலும் | (பேச்சின் இனிமையில் கொஞ்சுகிற) கிளி போன்றவளும் | நின் பற்றா நின் மகன் மேல் பழி விளைத்திட்டு | உனது அன்புக்கு இடமான உன் மகனான பரதன்மேல் பழியுண்டாம்படி செய்து |

| | |
|---|---|
| என்னையும் நீள் வானில் போக்க | (புத்ரவிரஹத்தால்) என்னையும் தூரத்திலுள்ள மேலுலகத்திற்குச் செலுத்துதலினால் |
| என் பெற்றாய் | நீ என்ன பயனடைந்தாய்! |

| | |
|---|---|
| | (இவ்வளவு செய்துவிட்டு நீ) |
| இரு நிலத்தில் | பெரிய இவ்வுலகத்தில் |
| இனிது ஆக | சுகமாக |
| இருக்கின்றாயே | வாழ்கின்றாயே. |

* * *—"கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு, மாடல்ல மற்றையவை" என்றபடி கல்வி அழிவில்லாத சிறப்புடைய செல்வமாதலால் அக்கல்வியைப் பூர்ணமாகப் பெற்ற வசிஷ்டர் முதலிய உபாத்தியாயர்களைப் பொன் பெற்றார் என்றார். பரதன் அந்நாட்டிலில்லாமல் மாதாமஹனைக் காணும்பொருட்டு மாமனுடைய கேகய தேசத்துக்குச் சென்றிருக்கையில் இங்கு கைகேயி செய்த முயற்சி பரதனுக்குத் தெரியாததும் தெரிந்தவளவில் மிக்க வருத்தத்தைத் தருவதுமாயினும் கைகேயி தன் மகனுக்காகச் செய்த முயற்சியில் அவன் மகனும் ஸம்பந்தப்பட்டவனென்று உலகத்தார் ஸந்தேஹித்து நினைப்பதற்கு இடங்கொடுத்தலால் "நின் மகன் மேல் பழி விளைத்திட்டு" எனப்பட்டது. உன் மகனுக்கு அநுகூலமாக நீ செய்த காரியம் அந்த உன் காதல்மகனுக்கே சாச்வதமான பெரும்பழியை விளைத்துத் தீமையாய் முடிந்ததே! என்று எடுத்துக்காட்டியபடி. தசரதன் இங்ஙனம் தனக்கும் தன் அருமை மகனான இராமனுக்கும் பெருந்தீங்கு செய்த கைகேயியின் வயிற்றிற் பிறந்தவனென்ற காரணத்தாலே பரதனிடத்துக்கொண்ட உபேக்ஷையினால் அவனை நின்மகன் என்றான்.

மருகி—மகன் மனைவி, (இதன் ஆண்பால்-மருகன்.) என் பெற்றாய் = இவ்வளவு கொடுமைகளை ஒருங்கே செய்தற்கு நீ என்ன நிறைமைபெற்றாய்! எனினுமாம். [இரு நிலத்தில் இனிதாக இருக்கின்றாயே.] "ஸம்ஸாரஸௌக்யமாகிறது, புத்ரர்களோடும் பர்த்தாவோடும் கூடியிருக்கையாய்த்து; உனக்குப் புத்ரனான பெருமானைக் காட்டிலேபோக்கி என்னையும் ஸ்வர்க்கத்திலே போக்குகையாலே ஸம்ஸாரஸௌக்யம் அழகிதாக அநுபவிக்கக்கடவையிறே" என்ற வியாக்கியானஸூக்தி காண்க. ஸ்ரீராமவிரஹத்தால் உலகமெல்லாம் வருந்திக்கிடக்கையில் நீ ஒருத்திமாத்திரம் மனமகிழ்ந்திருக்கின்றனையே, இது என்ன அழகு! என்க. (௫)

738 முன்னொருநாள்மழுவாளிசிலைவாங்கி அவன்தவத்தைமுற்றும்செற்றாய் *
உன்னையுமுன்னருமையையுமுன்மோயின்வருத்தமும் ஒன்றாகக்கொள்ளாது *
என்னையுமென்மெய்யுரையும்மெய்யாகக்கொண்டு வனம்புக்கவெந்தாய்! *
நின்னையேமகனாகப்பெறப்பெறுவேன் ஏழ்பிறப்பும்நெடுந்தோள்வேந்தே!   (௬)

| | |
|---|---|
| முன் ஒரு நாள் | முன்பு ஒரு காலத்திலே |
| மழு ஆளி சிலை வாங்கி | பரசுராமனிடத்திலிருந்து அவன் வில்லை வாங்கி |
| அவன் தவத்தை முற்றும் செற்றாய் | அவனியற்றிய தபஸ்ஸின் பயனை முழுதும் (அம்புக்கு இலக்காக்கி) அழித்திட்டவனே! |
| உன்னையும் உன் அருமையையும் | உன்னுடைய மேன்மையையும் (நான் பெருந்தவஞ் செய்து) உன்னை அருமை மகனாகப்பெற்ற தன்மையையும் |
| உன் மோயின் வருத்தமும் | உனது பெற்ற தாயான கௌசல்யை (உன்னைப் பிரிவில் தரியேன் என்று) உன் பின் தொடர்ந்த வருத்தத்தையும் |
| ஒன்று ஆக கொள்ளாது | ஒரு பொருளாகக் கொள்ளாமல் |

| | |
|---|---|
| என்னையும் | என்னையும் |
| என் மெய் உரையும் | எனது ஸத்யவாக்கையும் |
| மெய் ஆக கொண்டு | பொருளாகக் கருதி |
| வனம் புக்க எந்தாய் | காட்டிற் சென்ற எமது ஐயனே! |
| நெடுந்தோள் வேந்தே | பெரிய தோள்களையுடைய அரசனே! |
| ஏழ் பிறப்பும் | இனி அநேக ஜன்மங்கள் பிறந்து பிறந்த ஜன்மந்தோறும் |
| நின்னையே மகன் ஆக பெற பெறுவேன் | நீ எனக்குப் பிள்ளையாய்ப் பிறக்கும்படி பேறுபெறக்கடவேன். |

* * *—மழு ஆளி = மழுவை (ஆயுதமாக) ஆள்பவன்; இ-கருத்தாப்பொருள் விகுதி. அன்றியே, மழு வாளி-மழுவாகிய ஆயுதத்தை யுடையவன்; இ-பெயர் விகுதி. மழு வாள்-இருபெயரொட்டுப் பண்புத்தொகை. மழு-கோடாலி.

என் ஐயனே! உன்மீது நான் வைத்திருக்கும் அன்பின் தன்மையை மெய்யாக அறியாமல் என்னை வெறுந்தந்தையென்றே நினைத்து அப்பிதாவின் வாக்கியத்தைப் பரிபாலனம் பண்ணவேண்டுமென்றும், கெடுநாளாக ஸத்யமே சொல்லிவருகிற தந்தையை நாம் தோன்றி அஸத்யவாதியாக ஆக்கவொண்ணாதென்றும் என் ஸத்யத்தை ஸத்யமாக்க வேணுமென்றும் நெஞ்சிலே கொண்டு வனத்திற்புகுந்த என் அருமைமகனே! என்பது மூன்றாமடியின் கருத்து. தந்தை, மகனை எந்தாய் என்றது, அன்புபற்றிய வழுவமைதி. செற்றாய்=செறு-பகுதி. (௯)

739 தேனகுமாமலர்க்கூந்தல் கௌசலையும்சுமித்திரையுஞ்சிந்தைநோவ *
கூனுருவின்கொடுந்தொழுத்தைசொற்கேட்ட கொடியவள்தன்சொற்கொண்டு* இன்று
கானகமேமிகவிரும்பி நீதுறந்தவளநகரைத்துறந்து * நானும்
வானகமேமிகவிரும்பிப்போகின்றேன் மனுகுலத்தார்தங்கள்கோவே! (௰)

| | | | |
|---|---|---|---|
| மனுகுலத்தார் தங்கள் கோவே | மநுகுலத்திற் பிறந்த அரசர்களிற் சிறந்தவனே! | கானகமே மிக விரும்பி இன்று நீ துறந்த | காட்டையே மிகவும் விரும்பி இப்பொழுது நீ கைவிட்ட |
| தேன் நகு மா மலர் கூந்தல் | தேனைப் புறப்பட விடுகிற சிறந்த மலர்களைச்சூடிய கூந்தலையுடைய | | |
| கௌசலையும் | கௌஸல்யையும் | வளம் நகரை | (உன் பட்டாபிஷேகத்தின் பொருட்டு) அலங்கரிக்கப்பட்டிருக்கிற இந்நகரத்தை |
| சுமித்திரையும் | ஸுமித்ரையும் | | |
| சிந்தை நோவ | மனம் வருந்த | | |
| கூன் உருவின் கொடும் தொழுத்தை சொல் கேட்ட கொடியவள் தன் சொல் கொண்டு | வக்ரமான வடிவம் போலவே மனமும் கோணலாகப் பெற்ற வேலைக்காரியான கூனியினது வார்த்தையைக் கேட்ட கொடியவளான கைகேயியின் சொல்லை ஏற்றுக்கொண்டு | நானும் துறந்து | நானும் விட்டிட்டு |
| | | வானகமே மிக விரும்பி போகின்றேன் | மேலுலகத்தையே மிகவும் விரும்பி (அவ்விடத்திற்குச்) செல்கின்றேன். |

* * *—மூன்று தாய்மார்களில் இரண்டுபேர் வருந்தவும் ஒருத்தி மகிழவும் நீ அயோத்தியைத் துறந்து கானகஞ் சென்றாயாதலின், நானும் இவ்வயோத்தியைத் துறந்து மேலுலகை நோக்கிச் செல்லுகின்றேனென்கிறான். கூனுருவின்=இன்-ஐந்தனுருபு, ஒப்புப்பொருள். கொடுமை—நேர்மையேயன்றி வளைவுமாதலை 'கொடுங்கோல்,' 'கொடுமரம்' என்ற இடங்களிலுங் காண்க. தொழுத்தை-தொழும்பன் என்பதன் பெண்பால். மநு-ஸூர்யனது குமாரன்; வைவஸ்வதமநு. (௰)

740 ஏரார்ந்தகருநெடுமாலிராமனாய் வனம்புக்கவதனுக்காற்றா *
தாரார்ந்ததடவரைத்தோள்தயரதன்தான் புலம்பியவப்புலம்பல்தன்னை *
கூரார்ந்தவேல்வலவன்கோழியர்கோன் குடைக்குலசேகரன்சொற்செய்த *
சீரார்ந்ததமிழ்மாலையிவைவல்லார் தீநெறிக்கண்செல்லார்தாமே. (௧௧)

| | | | |
|---|---|---|---|
| ஏர் ஆர்ந்த | அழகு நிறைந்த | வேல் வலவன் | வேற்படையின் தொழிலில் வல்லவரும் |
| கரு | கரு நிறமுடைய | கோழியர் கோன் | உறையூரிலுள்ளார்க்குத் தலைவரும் |
| நெடு மால் | மஹா விஷ்ணு | குடை | கொற்றக்குடையை உடையவருமான |
| இராமன் ஆய் | ஸ்ரீ ராமனாகத் திருவவதரித்து | குலசேகரன் | குலசேகராழ்வார் |
| வனம் புக்க | காட்டுக்குச் சென்றதான | சொல் செய்த | அருளிச்செய்த |
| அதனுக்கு | அச்செயலை | சீர் ஆர்ந்த | சிறப்பு மிக்க |
| ஆற்றா | பொறுக்கமாட்டாமல் | தமிழ் மாலை இவை | தமிழ்ப் பிரபந்தரூபமான இப்பத்துப் பாசுரங்களையும் |
| தார் ஆர்ந்த தட வரை தோள் தயரதன் புலம்பிய | வெற்றிமாலை பொருந்திய பெரியமலைபோன்ற தோள்களையுடைய தசரத சக்ரவர்த்தி கதறின | வல்லார் | கற்கவல்லவர்கள் |
| அப்புலம்பல் தன்னை | அக்கதறல்களை, | தீ நெறிக்கண் | கொடியவழி யொன்றிலும் |
| கூர் ஆர்ந்த | கூர்மை மிக்க | செல்லார் | சென்று சேரமாட்டார்கள். |

(தான், தாம்—அசைகள்)

அடிவரவு:—வன்றாள் வெவ்வாய் கொல்லை வாபோகு பொருந்தார் அம்மா பூப் பொன் முன் தேன் ஏரார் அங்கண்.

***—விச்வாமித்ர முனிவன் தனது வேள்வியைக் காக்கும்பொருட்டு தசரத சக்கரவர்த்தியிடம் அநுமதிபெற்று இராமபிரானை இளையபெருமாளுடன் அழைத்துக்கொண்டு போனபொழுது அம்முனிவ னாச்ரமத்திற்குச் செல்லும் வழியிடையே மிக்க செருக்குடன் வந்து எதிர்த்த தாடகையை ஸ்ரீராமன் முனிவனது கட்டளைப்படி பெண்ணென்று பாராமற் போர்செய்து கொன்றது மன்றி, பின்பு முனிவன் செய்த யாகத்தில் விக்நம் விளைக்கவந்த ஸுபாஹு முதலிய பல அரக்கர்களையுங் கொன்று மாரீசனை வாயவ்யாஸ்திரத்தினாற் கடலிலே தள்ளிவிட்டு யாகத்தை நிறைவேற்றுவித்தனன் என வரலாறு அறிக.

[அந்தணர்கள் ஒரு மூவாயிரவர்.] "சங்கை நாலாயிரம், தில்லை மூவாயிரம்" என்ற ப்ரஸித்தி காண்க; "மூவாயிர நான்மறையாளர் நாளும் முறையால் வணங்க அணங்காயசோதித், தேவாதிதேவன் திகழ்கின்ற தில்லைத் திருச்சித்ரகூடஞ் சென்று சேர்மின்களே" என்றார் திருமங்கையாழ்வாரும். (உ)

743 செவ்வரிநற்கருநெடுங்கண்சீதைக்காகச் சினவிடையோன்சிலையிறுத்துமழுவாளேந்தி *
வெவ்வரிநற்சிலைவாங்கிவென்றிகொண்டு வேல்வேந்தர்பகைதடிந்தவீரன்தன்னை *
தெவ்வரஞ்சநெடும்புரிசையுயர்ந்தபாங்கர் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
எவ்வருவெஞ்சிலைத்தடக்கையிராமன்றன்னை இறைஞ்சுவாரிணையடியேயிறைஞ்சினேனே.(ங)

| | | | |
|---|---|---|---|
| செவ்வரி நல் கரு நெடு கண் | (உத்தம லக்ஷணமான) சிவந்த ரேகைகள் படர்ந்த அழகிய கருமையான நீண்ட கண்களையுடைய | வீரன் தன்னை | மஹாவீரனை,— |
| சீதைக்கு ஆக | ஸீதையை மணம்புரிதற் பொருட்டு | தெவ்வர் | பகைவர்கள் |
| சினம் விடையோன் | கோபத்தையுடைய ரிஷபத்தை வாஹனமாக வுடையனான சிவபிரானுடைய | அஞ்ச | (கண்டமாத்திரத்திலே, கடக்க வொண்ணாதென்று) அஞ்சும்படியான |
| சிலை இறுத்து | வில்லை முறித்து (பின்பு மிதிலாபுரியினின்று மீளும் வழியில்) | நெடு புரிசை | உயர்ந்த மதிளையும் |
| மழு வாள் ஏந்தி | கோடாலியாகிய ஆயுதத்தை ஏந்தியவனான பரசுராமனுடைய | உயர்ந்த பாங்கர் | ஓங்கிய (அட்டாலை யென்னும்) மதிற்பக்கத் திடத்தையுமுடைய |
| வெவ் வரி நல் சிலை | பயங்கரமான கட்டமைந்த சிறந்த வில்லை | தில்லை நகர் திருச் சித்ரகூடம் தன்னுள்— | (எழுந்தருளியிருக்கிற) |
| வாங்கி | கையிற்கொண்டு (வளைத்து) | எவ்வரு வெம் சிலை தட கை இராமன் தன்னை | (வேறொருவரால்) அடக்கியாளுதற்கு அரியதும் (பகைவர்க்குப்) பயங்கரமுமான வில்லை ஏந்திய பெரிய கையையுடைய இராமபிரானை |
| வென்றி கொண்டு | (அவனை) வென்று | இறைஞ்சுவார் | வணங்குகிற அடியார்களுடைய |
| வேல் வேந்தர் பகை தடிந்த | (தான் அவதரித்த ஸூர்யகுலத்திற் பிறந்த) வேற்படையையுடைய க்ஷத்ரியர்களுக்குப் பகையைத்தீர்த்த | இணை அடியே | இரண்டு திருவடிகளையே |
| | | இறைஞ்சினேன் | வணங்கினேன். |

***—நான்காமடியில் எவ்வரி என்றே பாடெங்கும் ஓதுவர்; அப்பாடத்துக்கு எவரி என்பது எவ்வரியென்று விகாரப்பட்டதெனக்கொண்டு, ஏ-அம்பு தொடுப்பதற்கு உரிய வரி-நீண்ட என்று கஷ்டப்பட்டுப் பொருள்கொள்ளலாமாயினும், "வேறொருத்தரால் அடக்கியாள வொண்ணாதே காணவே ப்ரதிபக்ஷம் முடியும்படியான ஸ்ரீசார்ங்கம்" என்ற வ்யாக்யானத்திற்கு அப்பாடம் சேராது. எவ்வரு என்றோதுவதே சிறக்கும். ஏவரு என்பது அதனை நோக்கி 'எவ்வரு' எனக் குறுக்கலும் விரித்தலுமாகிய விகாரங்களை யடைந்தது. ஏவு-ஏவுதல், அடக்கியாளுதல்; (முதனிலைத் தொழிற்பெயர்.) அரு-ஒண்ணாத; எனவே, அடக்கியாள முடியாத என்றதாயிற்று. [இறைஞ்சுவா ரிணையடியே யிறைஞ்சினேனே.] இராமனுக்கு அடியவனான பரதனுக்கு அடிமை பூண்டொழுகின சத்ருக்னன் போலப் பாகவத தாஸனாகவேண்டுமென அவாவுகின்றார்.(ங)

குசலவர் இராமாயண ப்ரவசநஞ்செய்து அதனால் உலகத்தை நன்னெறியில் உய்த்ததும், இராமபிரான்காலத்திற்குப்பின் அப்பெருமான்போலவே நீதி முறை தவறாது உலகத்தை இனிது ஆளுதலும் தோன்ற "உலகுய்யத் திருவயிறு வாய்த்த மக்கள்" என்றார்.

749 செறிதவச்சம்புகன்தன்னைச்சென்றுகொன்று செழுமறையோனுயிர்மீட்டுத்தவத்தோனீந்த *
நிறைமணிப்பூணணியுங்கொண்டிலவணன்தன்னைத் தம்பியால்வானேற்றிமுனிவன்வேண்ட *
திறல்விளங்குமிலக்குமனைப்பிரிந்தான்தன்னைத் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
உறைவானைமறவாதவுள்ளந்தன்னையுடையோம் மற்றுறுதுயரமடையோமன்றே. (௯

| | |
|---|---|
| செறி தவம் | மிக்க தபஸ்ஸையுடையனான |
| சம்புகன் தன்னை | (சூத்ரஜாதியனான) சம்புகனை |
| சென்று கொன்று | (அவனிருக்குமிடந்தேடிச்) சென்று தலையறுத்து |
| செழு மறையோன் உயிர் மீட்டு | சிறந்த ப்ராஹ்மண குமாரனுடைய உயிரை மீட்டுக் கொடுத்து, |
| தவத்தோன் ஈந்த | அகஸ்த்யமாமுனிவன் கொடுத்த |
| நிறை மணி பூண் அணியும் கொண்டு | பெருவிலையுள்ள ரத்நமயமான ஆபரணத்தையும் சாத்தியருளி |
| இலவணன் தன்னை | லவணாஸுரனை |
| தம்பியால் | சத்ருக்நனைக்கொண்டு |
| வான் ஏற்றி | வீரஸ்வர்க்கத்திற் குடியேற்றுவித்து |
| முனிவன் வேண்ட | —துர்வாஸமுனிவனது சாபத்தால் |
| திறல் விளங்கும் இலக்குமனை பிரிந்தான் தன்னை | பலபராக்ரமம் விளங்கப்பெற்ற லக்ஷ்மணனைத் துறந்தவனும் |
| தில்லை நகர் திருச் சித்ரகூடம் தன்னுள் | —, |
| உறைவானை | நித்யவாஸம் பண்ணுகிறவனுமான இராமபிரானை |
| மறவாத உள்ளம் தன்னை உடையோம் | மறவாமல் எப்பொழுதும் தியானிக்கிற மனத்தையுடையராம் |
| மற்று உறு துயரம் அடையோம் | இனி (எம்பெருமானை அநுபவிக்கப் பெற்றிலோமென்று) வருந்துன்பத்தை அடையமாட்டோம். |

(அன்று, ஏ—ஈற்றசை,)

* * *—தன்னை அக்காலத்திற் காணப்பெறாத குறைதீரப் பிற்காலத்தார் காணும்படி தில்லைத் திருச்சித்திரகூடத்தில் அப்படிப்பட்ட திவ்ய மங்கள விக்ரஹத்தோடு நித்யவாஸம் செய்தருளாநின்ற எம்பெருமானை இறையும்மறவாது எப்பொழுதும் தியானிப்போமாகில், 'அக்காலத்தில் எம்பெருமானை அநுபவிக்கப் பெற்றிலோமே' என்றுவரும் துன்பத்தை அடையமாட்டோம் என்றவாறு. (௯)

750 அன்றுசராசரங்களைவைகுந்தத்தேற்றி அடலரவப்பகையேறியசுரர்தம்மை
வென்று* இலங்குமணிநெடுந்தோள்நான்கும்தோன்ற விண்முழுதுமெதிர்வரத்தன்தாமம்மேவி*
சென்றினிதுவீற்றிருந்தவம்மான்தன்னைத் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
என்றும்நின்றானவனிவனென்றேத்தி நாளுமிறைஞ்சுமினோவெப்பொழுதுந்தொண்டீர்களே. (௰)

| | |
|---|---|
| அன்று | (தன்னடிச்சோதிக்கு எழுந்தருளுகிற) அக்காலத்தில் |
| சர அசரங்களை | (அயோத்யாபுரியிலுள்ள) ஜங்கமமும் ஸ்தாவரமுமான எல்லாவுயிர்களையும் |
| வைகுந்தத்து ஏற்றி | பரமபதத்துக்குப் போகச் செய்து, |
| அடல் அரவம் பகை ஏறி | வலிமையையுடைய பாம்புகளுக்குப் பகையான கருடன் மேல் ஏறிக்கொண்டு |
| அசுரர் தம்மை வென்று | அசுரர்களை ஜயித்து |
| இலங்கும் அணி நெடு தோள் நான்கும் தோன்ற | (வீர ஜயலக்ஷ்மி) விளங்கப்பெற்ற அழகிய நீண்ட (தனது) திருக்கைகள் நான்கும் விளங்க |
| விண் முழுதும் எதிர் வர | பரமபதத்திலுள்ளாரெல்லாரும் எதிர்கொண்டு உபசரிக்கும்படி |
| தன் தாமம் மேவி சென்று | தமது ஸ்தாநமான அப்பரமபதத்திலே போய்ப்புக்கு |
| இனிது வீற்றிருந்த | (தன் மேன்மையெல்லாம் தோன்றும்படி) இனிமையாகத் (திவ்யஸிம்ஹாஸநத்தில்) எழுந்தருளியிருந்த. |

| | |
|---|---|
| அம்மான் தன்னை | ஸர்வேச்வரனை |
| தில்லை நகர் திருசித்ரகூடம் தன்னுள் என்றும் நின்றான் அவன் இவன் என்று ஏத்தி | (அந்த இருப்பில் ஒன்றுங் குறையாமல் அவ்வாறே) தில்லைச் சித்ரகூடத்தில் எக்காலும் (நமக்காக) நித்யவாஸம் பண்ணுகிற அப்பெருமான் இவ்விராமபிரானே யென்றறிந்து துதித்து |
| தொண்டீர் நீர் | அவனுக்கு அடியவர்களான நீங்கள் |
| நாளும் எப்பொழுதும் | தினந்தோறும் எப்பொழுதும் |
| இறைஞ்சு மின் | வணங்கி உஜ்ஜீவியுங்கள். |

(ஏ—இசைநிறை.)

* * *—இளையபெருமானை விட்டுப் பிரிந்ததனால் தரிக்கமாட்டாமல் மிகவும் க்லேசமடைந்த இராமபிரான் ராஜ்யத்தைவிட்டு எழுந்தருளத் தொடங்கியபோது அயோத்யா நகரத்து உயிர்களெல்லாம் பெருமானைச் சரணமடைந்து 'தேவரீர் எங்குச் சென்றாலும் அடியோங்களையும் கூடவே அழைத்துக்கொண்டு செல்லவேண்டும்' என்று ப்ரார்த்திக்க, ஸ்ரீராமன் அவர்களுடைய பக்திப்ரகர்ஷத்தைக்கண்டு 'அப்படியே ஆகட்டும்' என்று அருளிச்செய்து, அனைவரையும் தம்மைப் பின்தொடர்ந்து வருமாறு பணித்தருளிப் ப்ரயாணப்பட்டனர். அப்பொழுது அங்கிருந்த மனிதர்களேயன்றி விலங்கு பறவை முதலிய அஃறிணை உயிர்களும் அகமகிழ்ந்து பெருமான்பின் சென்றன. இங்ஙனம் பலரும் புடைசூழ ஸ்ரீபகவான் ஸரயூநதியில் இறங்கித் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளும்போது தம்மிடத்து இடையறாத அன்புகொண்டு பின்பற்றிச்சரயுவில் மூழ்கி உடம்பைத் துறந்த எல்லாவுயிர்கட்கும் ப்ரஹ்ம லோகத்துக்கு மேற்பட்டதாய்ப் பரமபதம்போலவே அப்ராக்ருதமாகிற மேம்பாடுள்ள ஸாந்தாநிகமென்னும் உலகத்தை அளித்தனர். ஸ்ரீராமபிரான் பரமபதத்துக்குச் சென்றபோழ்து, சங்க சக்கரங்களிரண்டையும் தரிக்கிற மேற்பாற் கரமிரண்டுந் தோன்றப் பெற்றமை விளங்க, "அசுரர் தம்மை வென்றிலங்கு மணிநெடுந்தோள் நான்குந் தோன்ற" என்றார்; இந்த அடைமொழியை வீற்றிருந்த என்பதனோடாவது சித்ரகூடந்தன்னுள் நின்றான் என்பதனோடாவது இயைத்தலும் ஏற்கும். அடலரவப் பகையேறி என்றது, தன்தாமமேவி என்றதனோடும், அசுரர் தம்மை வென்று என்றதனோடும் இயைக்கத்தக்கது. (ம)

751 தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் திறல்விளங்குமாருதியோடமர்ந்தான்தன்னை *
எல்லையில்சீர்த்தயரதன்தன்மகனாய்த்தோன்றிற்றதுமுதலாத் தன்னுலகம்புக்கதீறா *
கொல்லியலும்படைத்தானைக்கொற்றவொள்வாள் கோழியர்கோன்குடைக்குலசேகரன்சொற்செய்த *
நல்லியலின்தமிழ்மாலைபத்தும்வல்லார் நலந்திகழ்நாரணனடிக்கீழ்நண்ணுவாரே. (கக)

தில்லை நகர் திரு சித்ரகூடம் தன்னுள்—

| | |
|---|---|
| திறல் விளங்கும் | பல பராக்கிரமம் விளங்கப் பெற்ற |
| மாருதியோடு | அநுமானுடனே |
| அமர்ந்தான் தன்னை | நித்யவாஸம் பண்ணுகிற எம்பெருமானைக்குறித்து |
| எல்லை இல் சீர் தயரதன் தன் மகனாய் தோன்றிற்று அது முதலா தன் உலகம் புக்கது ஈறு ஆ | அழிவில்லாத புகழையுடைய தசரதசக்ரவர்த்தியின் குமாரனாய்ப் பிறந்தது முதல் பரமபதம் புக்கது இறுதியாக (ஸ்ரீராமாயணகதை முழுதையும் ஸங்க்ரஹமாக அமைத்து) |
| கொல் இயலும் படை தானை கொற்றம் ஒள் வாள் கோழியர் கோன் குடை குலசேகரன் சொல் செய்த | (பகைவர்களைக்) கொல்லுதல் பொருந்திய ஆயுதங்களையுடைய சேனையையும் வெற்றியையும் ஒளியையுமுடைய வாளாயுதத்தையுடையவரும் உறையூரிலுள்ளார்க்குத் தலைவரும் வெண் கொற்றக்குடையை யுடையவருமான குலசேகராழ்வார் அருளிச்செய்த |
| நல் இயல் | சிறந்த இயற்றமிழிலக்கணத்துக்கு இசைந்த |
| இன் தமிழ் மாலை பத்தும் | இனியதமிழ்ப் ப்ரபந்த ரூபமான இப்பத்துப் பாசுரங்களையும் |
| வல்லார் | கற்று வல்லவர்கள் |
| நலம் திகழ் | பரமபதத்தில் விளங்குகிற |
| நாரணன் | ஸ்ரீமந் நாராயணனுடைய |
| அடி கீழ் நண்ணுவார் | திருவடிகளிற் சேரப் பெறுவார்கள். |

* * *.—இல்லைத் திருச்சித்ரகூடத் தெம்பெருமான் விஷயமாக ஸ்ரீகுலசேகராழ்வார் அருளிச்செய்த பரமபோக்யமான இத்திருமொழியை ஓதவல்லவர்கள் எம்பெருமானருளாற் பரமபதமடைவரென்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. பால்யத்தில் ப்ரஹ்மா அளித்த வரத்தினால் சிரஞ்சீவியானவரும், "[illegible]" [அதிமாநுஷஸ்தவம்.]

என்றபடி—ஸ்ரீராமகதை உலகத்திலுள்ளவளவும் நாம் ஜீவித்திருக்குமாறு ஸ்ரீராமனிடம் வரம்வேண்டிப் பெற்றவருமான திருவடி, இராமபிரான் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளிய பொழுது அவனைவிட்டுப் பிரியமாட்டாது மனமிரங்க, அந்த உத்தம பக்த சிகாமணியைத் தானும் விடமாட்டாமல் ஸ்ரீராமன் அவருடனே சித்ரகூடத்தில் வந்து வீற்றிருக்கின்றனனும்.

அடிவரவு:—அங்கண் வந்து செவ்வரி தொத்து வலி தன்யூ ஞூரை அம்பொன் செறி அன்று தில்லை பூவினர

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய,
பெருமாள் திருமொழி உரை
முற்றுப்பெற்றது.